ரோஜா முத்தையா ஆராய்ச்சி நூலகம்
**ROJA MUTHIAH RESEARCH LIBRARY**
3rd Cross Road, Central Polytechnic Campus
Taramani, Chennai 600 113, Tamilnadu, INDIA

Bibliographic Record Target

*நூருல் இஸ்லாம் = Noor-ul-Islam. -- மலர் 1, இதழ் 1 (Nov. 1939)- . – Madras :*
*Hafiz A. N., Md. Yusuf (Baqavi), 1939-*
*v. : ill. ; 23 cm.*
*Monthly.*
*In Tamil.*
*Editor: A. N. ஹாபிஸ் முஹம்மது யூசுப் (பாஜில் பாகவீ)*
*Record No. 2621*

*Nūrul Islām = Noor-ul-Islam. -- Malar 1, itaḻ 1 (Nov. 1939)- . – Madras :*
*Hafiz A. N., Md. Yusuf (Baqavi), 1939-*
*v. : ill. ; 23 cm.*
*Monthly.*
*In Tamil.*
*Editor: A. N. Hāpis Muhammatu Yūcup (Pājil Pākavī)*
*Record No. 2621*

35 mm microfilm

Image placement: IA (IIA) IB IIB

Date filming began: 26 December, 2008

# List of issues filmed

## நூருல் இஸ்லாம்

மலர் 4, இதழ் 5 (Mar. 1943)
மலர் 4, இதழ் 6 (Apr. 1943)
மலர் 4, இதழ் 7 (May 1943)
மலர் 5, இதழ் 1 (Nov. 1943)
மலர் 6, இதழ் 1 (Nov. 1944)
மலர் 6, இதழ் 2 (Dec. 1944)
மலர் 6, இதழ் 3 (Jan. 1945)
மலர் 6, இதழ் 5 (Mar. 1945)
மலர் 6, இதழ் 6 (Apr. 1945)
மலர் 6, இதழ் 8 (June 1945)
மலர் 6, இதழ் 9 (July 1945)
மலர் 6, இதழ் 11 (Sept. 1945)
மலர் 6, இதழ் 12 (Oct. 1945)
மலர் 7, இதழ் 2 (Dec. 1945)
மலர் 7, இதழ் 3 (Jan. 1946)
மலர் 7, இதழ் 5 (Mar. 1946)

Continued ...

மலர் 7, இதழ் 6 (Apr. 1946)
மலர் 7, இதழ் 7 (May 1946)
மலர் 7, இதழ் 8 (June 1946)
மலர் 7, இதழ் 9 (July 1946)
மலர் 7, இதழ் 10 (Aug. 1946)
மலர் 7, இதழ் 11 (Sept. 1946)
மலர் 7, இதழ் 12 (Oct. 1946)
மலர் 8, இதழ் 2 (Dec. 1946)
மலர் 8, இதழ் 3 (Jan. 1947)

*Nūrul Islām*

*Malar 4, itaḻ 5*

*March 1943*

Record no. 2621



மலர் - 4 | ஹிஜ்ரீ 1362ஹு ரபீயுல் அவ்வல் கி.பி. 1943ஹு மார்ச்சுமீ | இ - 5

## விஷய அட்டவணை



"நூருல் இஸ்லாம் ஆபீஸ்,"
65, பிராட்வே, ஜார்ஜ் டவுன், மதராஸ்.



Roja Muthiah Research Library
3rd Cross Road, C P T Campus
Taramani, Chennai 600 113,

Best copy available

# ரிஜிஸ்டர்ட்

# தாஜ்மஹால் பீடிகளை

## எப்பொழுதும் உபயோகியுங்கள்

No. 1, Strong Jadi Beedi




ஒரு வஸ்துவின் பெருமையை அதிகமாக சொல்லுவது பெரிய காரியமல்ல. இந்த விஷயம் தெரிந்துகொள்ள, தாங்கள் ஒரு தடவை தாஜ்மஹால் பீடிகளை சாம்பிளாக வரவழைத்து உபயோகித்துப் பார்த்தால், அதனுடைய இனிய வாசனையும், இன்பமும் தெரியவரும்.

உலகமெங்கும் பிரக்யாதி பெற்ற தாஜ்மஹால் பீடிகள் அதிகமாகச் செலவாகிறதென்று தெரிந்து, பொருமையினல் போலி ட்டிரேட் மார்க்குள்ள பீடிகளை விற்பனை செய்கிருர்கள். ஆகையால் தாஜ்மஹால் பீடிகளை வாங்குவோர்கள், ஒவ்வொரு பண்டல்களின் பேரிலும் எங்களுடைய தாஜ்மஹால் லேபில்களையும் மேல் விலாசத்தையும் நன்ருகக் கவனித்துப் பார்த்து வாங்குவார்களென்று நம்புகிருேம்.

**சையத் காதர் சாயபு,**

பென்ஷண்ட் ஹவல்தார்,

தாஜ்மஹால் பீடி வியாபாரம்,

வண்ணரப்பேட்டை, மதராஸ்.


بسم الله الرحمن الرحيم

نحمده ونصلي على رسوله الكريم

# நூருல் இஸ்லாம்

(ஓர் உயரிய செந்தமிழ் மாசிகை)

# NOOR-UL-ISLAM

**(AN EXCELLENT TAMIL MONTHLY)**


ஆசிரியர் : A. N. ஹாபிஸ் முஹம்மது யூசுப் (பாஜில் பாகவீ)

மலர் - 4 ஹிஜ்ரீ **1362**ஹு ரபீயுல் அவ்வல் இ - 5

கி.பி. **1943**ஹு மார்ச்சுமீ


## கடவுள் புகழ்ச்சி

**HAMD—PRAISE OF GOD**

"சர்வ உலகங்களின் இரட்சகனுகிய அல்லாஹ்வுக்கே சர்வ புகழ்ச்சிகளும் உரித்தாயிருக்கின்றன." (பாத்திஹா, 1 : 1)

"எல்லாப் புகழும் அல்லாஹ்வுக் குரியவைகளாகவே இருக்கின்றன. அவன் வானங்களையும் பூமியையும் சிருஷ்டித்திருக்கிருன். இன்னும் இருளையும் ஒளியையும் செய்துள்ளான். (நன்கு நிதானமாய் அலசிக் கவனித்துப் பார்ப்பவர்களுக்கு இதில் நன்மையான போதனைகளுமுண்டு). இதற்குப் பின்னர், (அல்லாஹ்வின்மீது) நன்னம்பிக்கை அற்றிருப்பவர்கள் தமது இரட்சகன் பார்வையிலிருந்து (வேறு வழியில்) திரும்பிச் செல்கின்றவர்களா யிருக்கின்றனர்." (அன்ஆம், 6 :)

"(இஸ்லாத்துக்குரிய) இதன்பால் நமக்கு நேரான வழியை அளித்த அல்லாஹ்வாகிய அவனுக்கே சர்வ புகழ்ச்சிகளும் ஏற்றவையாம். அல்லாஹ் நமக்கு இந் நேர்வழியைக் காட்டவில்லையாயின் நாம் நேர்வழி அடைந்திருக்கப் போவதேயில்லை." (அஃராப், 7 :)

"தனது அடியாரை (முஹம்மதை) ஓர் இரவில் மக்காவிலிருந்து இறுதி ஆலயம் (பைத்துல் முகத்தஸ்) வரை நடாத்திச் சென்ற (அல்லாஹ்வாகிய) அவன் தூய்மையானவன். அப் பள்ளிவாயிலின் சுற்றுப் புறங்களை நாம் மக்களுக்குத் திருஷ்டாந்தங்களாய்க் காட்டுவதற்காகக் கௌரவப்படுத்தியுள்ளோம். நிச்சயமாகவே அவன் கேட்பவனுக, (சர்வ பொருள்களையும்) பார்க்கிறவனுக இருக்கிருன்." (பனீ இஸ்ராயீல், 17 :)

"ஏழு வானங்களும் பூமியும் அவற்றினுள்ளே காணப்படுபவைகளும் (அல்லாஹ்வாகிய) அவனுக்கு ஜபிப்பவைகளா யிருக்கின்றன. ஒரு வஸ்துவும் அவனுடைய புகழ்ச்சி கொண்டு ஜபிக்காமல் இருப்பதே இல்லை. ஆனல், அவற்றின் ஜபத்தை நீங்கள் விளங்கிக் கொள்ளுகின்றீர்களில்லை. நிச்சயமாகவே அவன் (சர்வ குறைபாடுகளையும்) பொறுத்தருள்பவனுக, (சர்வ பாபங்களையும்) அதிகம் மன்னிப்பவனுக இருக்கிருன்." (பனீ இஸ்ராயீல், 17 :)

"(ஏ நபியே!) சொல்வீராக : சர்வ புகழ்ச்சிகளும் அல்லாஹ்வுக் குரியவைகளாகவே இருக்கின்றன. அவன், (தனக்கென) சந்ததியைப் பெறவில்லை. மேலும் (அவனுடைய) அதிகார ஆட்சியில் இணையானவர் அவனுக்கு ஒருவருமில்லை. இன்னும் கேவலத் தன்மையினின்றும் தப்பிக் கொள்வதற்காக அவனுக்கென அதிகாரி ஒருவருமில்லை. எனவே, அவனுடைய பெருமையைப் பெரிதாக்கி வைப்பீராக. (பனீ இஸ்ராயீல், 17 :)

"சர்வ புகழும் அல்லாஹ்வுக்கு உரித்தானவைகளாகவே இருக்கின்றன. அவன் தன் அடியார்பால் வேதத்தை வெளிப்படுத்தினுன். இன்னும் அதற்கு எவ்விதக் குறைபாட்டையும் செய்தானில்லை. அது நேர்மையானது; அல்லாஹ்வின்பாலிருந்து கடுமையாய் வரும் கஷ்டத்தை (வேதனையை) அச்சுறுத்துகிறது. மேலும் (இப்படியே) நற்கிரியைகளைச் செய்பவர்களான நன்னம்பிக்கையுடைய அவர்களுக்கு அழகான பிரதிபலன் உண்டு என்றும் அவ்வேதம் நன்மாராயம் உரைக்கிறது. இன்னும் அல்லாஹ் (தனக்காக) குமாரனை எடுத்துக்கொண்டான் என்று கூறுகின்ற அவர்களையும் அச்சுறுத்துகிறது. (எனவே) இது சம்பந்தமாய் (இக் கூற்றுளர்களான) அவர்களுக்கும் அவர்களுடைய பிதாமகர்களுக்கும் சரியான ஞானம் என்பதே இல்லை அவர்களின் நாக்களினின்றும் வெளியாகும் இவ்வார்த்தை மிகப் பெரிது. (கொடியதுமாகும்). அவர்கள் பொய்யல்லாமல் மற்றென்றையும் கூறுகின்றுர்களில்லை. (எனவே, ஆண்டவனுக்கு மனைவி உண்டென்று கூறுகிறவர்களும், மனைவி இல்லாமலே குமாரன் உண்டென்று கூறுகிறவர்களும் மகா கொடியவர்களென்று இவ்வாக்கியம் அறிவுறுத்துகின்றது. ஆண்டவன் தனித்தவன். அவனுக்குக் குழந்தை இல்லை, மனைவி இல்லை. இவற்றைவிட்டும் அவன் மகா மேலானவனுக விளங்குகிறுன்.) (கஃப், 18 :)

---


*Use always* **Deccan Hair Oil.**

**டெக்கான் ஹேர் ஆயிலை**

அன்புள்ள ஐயா, **உபயோகியுங்கள்**

நான் "டெக்கான் ஹேர் ஆயிலை" கிரமமாய் உபயோகிக்கிறேன். நான் இங்கிலாந்து, கல்கத்தாவிலிருந்தபோதுகூட இந்த ஆயிலையே உபயோகித்து வந்திருக்கின்றேன். ஏனென்றுல்எல்லா மேல்நாட்டுப் பிரபல கூந்தல் தைலங்களைவிட இது மிகவும் மேலானதாயிருக்கிறது; எனவே எனது சகோதரிக்கும் இதையே உபயோகிக்கும்படி சொன்னேன். அவர் என்னைவிட அதிகமாக இதைப்பற்றிப் புகழ்கிறுர். ஏனெனில் இது அவருக்கு மிகவும் அதிக நன்மை செய்துள்ளது.

தயவுசெய்து இன்னும் 3 புட்டி "டெக்கான் ஹேர் ஆயிலை" அவருக்கு அனுப்புங்கள்.

(கையொப்பம்) ஏ. ஜி. எச். அஹ்மது.




3 புட்டிகளுக்குக் குறைந்து கம்பெனியிலிருந்து அனுப்ப முடியாதாகையால், தங்களூர் வியாபாரியிடமே கேளுங்கள்.

சென்னை, பெங்களூர், மைசூர் முதலிய நகர எல்லா ஷாப்புகளிலும் கிடைக்கும்.

**டெக்கான் ஹேர் ஆயில் கம்பெனி,**

ஹைதராபாத் (டெக்கான்).

**The Deccan Hair Oil Co., Hyderabad (Dn.)**

**& in all Madras, Mysore, Bangalore Shops.**



"நூருல் இஸ்லாம்"

ஜீவிய சந்தா ரூ. 100—0—0 | இந்தியா, ஸிலோன் நாடுகளுக்கு ரூ. 3—0—0
போஷக சந்தா ரூ. 25—0—0 | மாதிரிப் பிரதி (தபால் செலவுடன்) 0—5—0

விளம்பர விகிதம்

1 பக்கத்துக்கு 1 மாதம் மட்டும் ரூபா 30
½ " " ரூபா 15





## பரிசுத்த மீலாதுப் பெருநாள்

## THE SACRED MEELAD-UN—NABI

இந்நிலவுலகு தோன்றிய நாள் தொட்டு மக்கள் இன்ப வாழ்வு பெறுதற்குரிய வழிகளை வகுப்பதிலேயே முயற்சி செய்து கொண்டிருந்தனர். இன்ப வாழ்வு வேண்டாதார் யாவர்? அனைவரும் அதனையே விழைவர். ஆயின் மக்கள் இனம் முழுவதும் அவ்வின்ப வாழ்வைப் பெறுவதுதான் இயலாக் காரியமா யிருக்கிறது.

உலகம் தோன்றியது முதல் இந்நாள் ஈருக, மக்களின் இன்ப-நல-வாழ்விற்கெனவே பல சமயஙகள் தோற்றுவிக்கப்பட்டன. நல் வாழ்விற்கென அச்சமயப் பெரியார்களெல்லாம் பற்பல வழிகளைக் கண்டனர் அவ்வழிகளைப் பின்பற்றிய மக்களும் பல்லோர். ஆயின் அம்மக்கள் இன்ப நல் வாழ்வு பெற்றனரா அல்லது இடர்ப்பட்டனரா என்பது உலகமக்களைக் குறித்து ஒரு முறை சிந்தித்துப் பார்ப்போர் அனைவரும் அதி எளிதில் அறிந்து கொள்ளக் கூடியதாகவே இருக்கிறது.

உலகிற் பல்லோரால் பின்பற்றக் கூடிய கிறிஸ்தவ சமயம் பரவியுள்ள நாடுகளைப பாருங்கள். இன்று கொடுமையான கொலைத் தொழிலில் இறங்கியிருக்கக் காண்பீர்கள். இன்று போரில் ஈடுபட்டு, மண்ணாசை வெறிபிடித்து மக்களைச் சிதைக்கும் தொழிலில் இறங்கியுள்ள நாடுகள் கிறிஸ்தவ சமயத்தைப பின்பற்றுபவைகளே. அடுத்ததாக, மற்றொரு பெரும் சமயமாகிய பௌத்தமதத்தைப் பின்பற்றும் ஜப்பான், சீனு போன்ற நாடுகளை எடுத்துக் கொள்ளுங்கள். அவைகளும் இப்படியே போர்மட்டுமன்று; வாழ்க்கையிலும் மக்கள் நல்வாழ்வு பெறமுடியாதவாறு ஏற்றத் தாழ்வுகளும்

தொல்லைகளும் மல்கி விட்டன. இந்தியாவின் பெரும் சமயமாகிய ஹிந்து மதத்தைப் பின்பற்றும் மக்களிடையேயும் இத்தகைய தொல்லைகள் பெரும் அளவிற்குக் காணப்படுகின்றன. மனிதனுக்கு மனிதன் வேறுபாடு, பார்க்காமை, தொடாமை போன்ற கொடுமைகளும்கூட இந்த மதத்தில் இருக்கக் காண்கிறோம். ஆகவே, பொதுவாக உலக மக்களுக்கெனத் தோன்றிய எச்சமயமும் மக்களின் வாழ்வை உயர்த்தவோ. இன்பமானதாக, நலன்கள் நிறைந்ததாக ஆக்கவோ முடியாமல் இடர்ப்பட்டு நின்றுவிட்டது.

இவ்வளவு தொல்லைகளையும் ஒழித்து, உலக மக்கள் அனைவரும் இம்மையில் மட்டுமின்றி மறுமையிலும் நலன் அடையுமாறு நல்வழிகள் காட்டவோ, அல்லது காட்டிய வழிகளை மக்கள் சற்றும் தவறாமல் பின்பற்றி நடக்குமாறு செய்யவோ, இச்சமய போதகர்களால் முடியாமற் போய் விட்டது.

இத்தகைய நிலைமையில், மக்கள் நல் வாழ்வுக்குரிய வழி காண முடியாது தவித்துத் தவறான பாதையில் தடுமாறி இடர்ப்பாடுகள் அடைந்து துன்மார்க்கர்களாய், கொடியவர்களாய் வாழ்க்கை நடாத்தத் தொடங்கிய சமயத்தில், இத்தகைய கொடுமைகளெல்லாம் ஒருங்கே திரண்டு கிடந்த ஒரு பிரதேசத்தில் எம்பெருமானார் முஹம்மது முஸ்தபா ரசூல் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தோன்றினார்கள். இந்நிலவுலகின் மக்கள் அனைவரும் ஒரே இனத்தவராய், ஒரே கொள்கையினராய், ஒரே நோக்கமுடையராய், ஒரே நாகரிகத்தவராய், ஒரே இறைவனை வழிபடுபவராய், ஏற்றத் தாழ்வென்பதின்றி ஒரே அந்தஸ்துடையராய், இம்மைக்கும் மறுமைக்கும் உரிய நல்வாழ்வு வாழ்பவராய் வாழ வேண்டுமென்னும் பெருநோக்கே எம்பெருமானாரின் ஒரே கொள்கையாக இருந்தது.

இவ்வண்ணம் உலகமக்களை உயர்ந்த சன்மார்க்க சீலர்களாய் ஆக்குவதற்கென்றே இவ்வுலகில் தோற்றுவிக்கப்பட்ட எம் பெருமானார்(ஸல்) அவர்கள் பிறந்த நன்னாளே மீலாதுன்னபி என்று கூறப்படுவது. இப்பெருமைக்குரிய நாள் இம்மாதம் 19-ஆந் தேதியன்று இவ்வுலகில் 60 கோடி மக்களால சிறப்பாகக் கொண்டாடப் பெற்றது என்பது ஐயத்திற்கிடமற்ற செய்தியாகும்.

ஆனால் கடந்த மூன்று ஆண்டுகளாக உலகம் போர்த் தொல்லையில் சிக்கியிருக்கும் நிலையில் இந்நன்னாள் கொண்டாடப் பெற்று வருகிறது. கடந்த ஆண்டும் இவ்வாண்டும் நம் நாடு யுத்த பீதியால் அவதியுறும் சமயத்தே இந்நன்னாளைக் கொண்டாடியுள்ளோம். இச் சிறப்புக்குரிய நாளைக் கொண்டாடுவதன் கருத்தென்ன?

நபிகள் பெருமானார்(ஸல்) அவர்கள் இவ்வவனியில் அவதரித்து இவ்வாண்டுடன் 1414 ஆண்டுகள் பூர்த்தியாயின. நபிபெருமான்(ஸல்) அவர்கள் உலகினருக்களித்த சன்மார்க்க சமயமாம் இஸ்லாம் இவ்வுலக மக்களின் தொல்லைகளையெல்லாம் வேரறுத்து, சத்தியத்தையும் சன்மார்க்கத்தையும் அன்பையும் அருளையும் இவ்வுலகில் நிலைநாட்டியது; இன்னும் நிலைநாட்டிக் கொண்டு வருகிறது. தொடக்கத்தில் கணவரும் மனைவியுமாய் இருவர் மேற்கொண்ட இஸ்லாம் என்னும் சீரிய சன்மார்க்கம் இன்று இவ்வுலகில் 60 கோடியினரால் பின் பற்றப்படுகிறது. இன்னும் பல கோடியினர் இச் சன்மார்க்கத்தைப் பின்பற்றி வருகின்றனர். உலகமே இதனை ஏற்கும் நாள் விரைவில் ஏற்படும் என்பது உறுதி.

உலகிற்குப் பெரும் நன்மை விளைவிக்கத் தோன்றிய இப்பெருமானாரின்(ஸல்) ஜெயந்தி நாளை முஸ்லிம்கள் மட்டுமே அன்றி இவ்வுலக மக்கள் அனைவருமே கொண்டாடி மகிழவேண்டும். இதற்கு எம்பெருமானாரைப் பின்பற்றும் முஸ்லிம்கள் செய்ய வேண்டியதென்ன? நபிபெருமானார்(ஸல்) அவர்களின் ஜீவிய சரித்திரத்தை எல்

# அரிமா நோக்கு Views Resume

## காகிதப் பஞ்சம்

நம் நாட்டில் மற்றெல்லாப் பொருள்களையும் விடக் காகிதத்திற்குத் தான் பெரும் பஞ்சம் ஏற்பட்டு விட்டது. பிறநாடுகளிலிருந்து காகிதங்கள் போதிய அளவு வராமையும் நம் நாட்டில் தயாராகும் காகிதத்தில் பெரும்பான்மை ஸர்க்காரின் உபயோகத்துக்கு வேண்டியிருப்பதுமே இப்பஞ்சத்திற்குக் காரணம் எனலாம். காகிதம் சரியாகக் கிடைக்காமையால், ஏப்ரில் மாதம் முதல் தேதியிலிருந்து தினசரி பத்திரிகைகள்கூட அளவில் குறைந்தும் அதிக விலையுடனும் வெளிவரவிருக்கின்றன; சில, காகிதம் கிடைக்காமையால் வெளிவராமல் நின்றும் போகலாம். இத்தகைய நெருக்கடி மிக்க சமயத்திலும் நம் "நூருல் இஸ்லாம்" மட்டும் தவறாமல் வெளிவர ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. இது ஆண்டவன் உதவியே. இது மட்டுமல்ல. இப்போதுள்ள விலையை எக்காரணம் கொண்டும் அதிகப்படுத்துவதில்லை யென்றும் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. ஆனால், பக்கங்கள் குறைந்திருக்கக் காணலாம். உண்மை. இதுவரை 52 பக்கங்கள் வெளியிடப்பட்டது இனி 36 பக்கங்களாக வெளிவரும். ஆனால், 52 பக்கங்களில் வெளிவந்த விஷயமனைத்தும் இந்த 36 பக்கங்களில் அடங்கி வெளிவருமாறு சிறிய எழுத்தில் அச்சிடப்பட்டிருக்கின்றன.

## அன்பர்கள் செய்யவேண்டுவ தென்ன?

இவ்வளவு நெருக்கடியிலும் விலை உயர்த்தாமலும் விஷயங்களைக் குறைக்காமலும் நம் "நூருல் இஸ்லாம்" வெளிவருவதில் எவ்வளவோ கஷ்டங்களைச் சமாளிக்க வேண்டியிருக்கிறது. இதனை முஸ்லிம் அன்பர்கள் நன்கு

---

(188-ம் பக்கத்தொடர்)

லாச் சமய மக்களுக்கும் எடுத்து விளக்கவேண்டும்; சுத்த சத்திய சன்மார்க்கமாம் இஸ்லாத்தின் கொள்கைகளை எடுத்துக் காட்டவேண்டும். இவை எல்லாவற்றிற்கும் மேலாக, முஸ்லிம்கள் தங்களின் நடத்தையால் இஸ்லாத்தின் பெருமையை விளக்க வேண்டும்.

ஒற்றுமையாகவும், கட்டுப்பாடாகவும், கல்வியில் மிக்கோர்களாகவும், மக்களனைவரும் ஆண்டவன் படைப்பில் சரிசமமானவர்களே என்பதையும் ஆணும் பெண்ணும் ஒரே வித உரிமையுடையவர்களே என்பதையும் விளக்குபவர்களாகவும், இஸ்லாத்தின் பரிசுத்த வேதமாம் திரு குர்ஆனை ஒழுங்காகப் பின்பற்றுவதால் இவ்வுலக வாழ்வை எங்ஙனம் இன்பமுடைய நல்வாழ்வாக மாற்றியமைத்துக் கொள்ள முடியும் என்பதை எடுத்துக்காட்டுபவர்களாகவும் வாழவேண்டும். இஸ்லாத்தைப் பின்பற்றுவதால், முஸ்லிம்களாய் வாழுவதால், இவ்வுலக வாழ்வில் எத்தனை விதமான தொல்லைகள் அகன்று விடுகின்றன என்பதைப் பிற சமய மக்கள் உணர்ந்து கொள்ளுமாறு நடந்து காட்டவேண்டும். இதுதான் ஆண்டு தோறும் எம்பெருமானாரின்(ஸல்) பிறந்த தினவிழா கொண்டாடப்படுவதன் உட்கருத்தாகும்.

புத்தம் புதிய உடைகளணிந்து, புலாவ் சோறு உண்டு, கேளிக்கைகளில் ஈடுபடுவது மட்டும் இந்நன்னாளின் நோக்கமன்று. அவற்றைவிட, இஸ்லாத்தினையும், அதனை உலக மக்களுக்கு உவந்தளித்த எம்பெருமானார்(ஸல்) அவர்களையும் பற்றி உலக மக்கள் உணர்ந்துகொள்ளுமாறு செய்வதும், செய்வாருக்கு உதவி புரிவதுமே முக்கியமான தாகும். இதனை முஸ்லிம்கள் உணர்ந்து கடனாற்றுவார்களாக.

கவனித்து, சந்தாவைப் பாக்கியாக வைத்திராமல் அனுப்பி வைத்துவிட வேண்டும். புதிதாகப் பலரைச் சந்தாதாரர்களாகச் சேருமாறு தூண்ட வேண்டும். "நூருல் இஸ்லாம்" உங்களுடைய சொந்தப் பத்திரிகை என்பதை மனத்தில் வைத்து அதன் வளர்ச்சிக்காக உழைக்க வேண்டும். இதுவே எமது பணிவான வேண்டுகோள்.

## முஸ்லிம்கள் கவனிப்பார்களாக.

பிரயாக் மஹிளா வித்யா பீடத்தில் காலேஜ் வகுப்புக்களில் ஹிந்தி வாசிக்கும் மாணவிகளுக்கு மாதம் ஒன்றுக்கு ஒவ்வொருவருக்கு ரூ. 15 வீதம் 100 பேருக்கு உதவிச் சம்பளம் கொடுக்க, சேத் இராமகிருஷ்ணஜீ டால்மியா ஒப்புக் கொண்டிருக்கிறார் என்று அறிவிக்கப்படுகிறது. இதில் ஓரளவு சென்னை மாகாணத்தைச் சேர்ந்த ஹிந்தி படிக்கும் காலேஜ் மாணவிகளுக்கென்று ஒதுக்கப்பட்டிருக்கிறதாம். ஹிந்தியைப் பரப்ப வேண்டுமென்னும் ஆர்வம் ஹிந்திக்காரர்களுக்கு எவ்வளவு அதிகமாயிருக்கிறது பாருங்கள். தமிழ் நாட்டில், வந்து பொருளீட்டிச் செல்லும் வட இந்தியர்கள், தங்கள் தாய்மொழியைப் பரப்புவதில் இவ்வளவு சிரத்தை காட்டுகிறார்கள். ஆனால், உர்தூக்காரர்கள் இன்னும் உறங்கிக்கொண்டுதாமிருக்கிறார்கள். ஹிந்தி பிரசார சபை ஏற்படுத்தியும், காங்கிரஸ் ஸர்க்கார் மூலம் இந்தியைக் கட்டாய பாடமாக வைத்துப் பரப்பமுயன்றும், இந்திக்காரர்கள் என்னென்னவோ பிரயாசைகளெல்லாம் எடுத்துக்கொண்டும் வருகின்றார்கள். ஆனால் உர்தூவைப் பரப்ப முஸ்லிம்கள் ஒரு முயற்சியும் செய்வதாய்க் காணோம். உர்தூவைப் பிரசாரம் செய்ய, சபைகளோ, தனிப் பிரமுகர்களோ முன்வந்து தகுந்த முயற்சிகள் செய்யக் காணோம். பிறமொழியார் செய்யும் வேலைகளைப் பார்த்த பிறகாவது முஸ்லிம்கள் உணர்ச்சி கொள்ளக் கூடாதா? உர்தூவைப் பரப்ப ஏற்பாடுகள் செய்யக் கூடாதா? இந்த உறக்கம் என்றுதான் தீரும்?

## நேயர்களுக்கு விண்ணப்பம்

கட்டுரைகள் எழுதியனுப்பும் நேயர்கள், தாங்கள் எழுதும் விஷயங்களைத் திருத்தமாகவும் தெளிவாகவும் பிழைகளின்றியும் காகிதத்தின் ஒரே பக்கத்தில் மையினால் எழுதியனுப்ப வேண்டும். விஷயங்களும் முக்கியமானவைகளாக இருக்கவேண்டும்; சுயமே சிந்தித்து ஆராய்ந்து எழுதவேண்டும். இவ்வாறில்லாதவைகள கவனிக்கப்படமாட்டா என்பதை அறிவித்துக்கொள்கிறோம். கட்டுரைகளைத் திரும்பப் பெறவேண்டுவோர் $1\frac{1}{2}$ அணா ஸ்டாம்பு உடன் வைத்தனுப்பவேண்டும்.

---





குழந்தையின் தேவை

அர்மாஸ் கெரிஸன் வாட்டர் (ரிஜிஸ்டர்ட்)

குழந்தைகளின் கஷ்ட நிவாரணியும் சிறந்த பலந்தரு மருந்தும், கக்குவாய் இருமல், வயிற்று நோய், குடல் வியாதிகள், சொறி சிரங்குகள், அதிக சூட்டால் வாய் மூக்கு குழறிப் போதல் முதலிய வியாதிகளை நிவர்த்தி செய்யும்.

சாப்பிடும் அளவு: பிறந்த குழந்தைகளுக்கு ¼ டேபிள் ஸ்பூன் அளவு, ஒரு மாத முதல் ஆறு மாதவரையுள்ள குழந்தைகளுக்கு ½ டேபிள் ஸ்பூன், ஆறு மாதமுதல் 1 வருடம் வரை 1 டேபிள் ஸ்பூன், ஒன்று முதல் 2 வருடம் வரை 2 டேபிள் ஸ்பூன்; பெரியவர்களுக்கு 2 முதல் 4 டேபிள் ஸ்பூன்.

தயாரிப்பவர்கள்: **A. R. MAS & CO.**

(ரிஜிஸ்டர்ட் டிரேட் மார்க் பார்த்து வாங்கவும்; அதுவே சிறந்தது)


# உண்மை உபதேசங்கள் அல்லது குத்பாத்-V

## GOOD SERMONS OR KHUTHBATH

**BY MOULANA MAUDUDI**

III

ஆண்டவனுக்கு இணைவைப்பவர்கள் கூறுவதாவது: 'கடவுள் தன்மையில் மற்றவரும் கூட்டாயிருக்கின்றனர்; மற்றவரும் உணவளிக்கின்றனர்; வேறு பலரும் எஜமான்களாகவே விளங்குகின்றனர்; இன்னும் பிறரும் கூடப் பிரயோஜனம் அளிக்கவும் நஷ்டத்தை உண்டு பண்ணவும் சக்தி படைத்தவர்களாய் விளங்குகின்றனர். வேறு சிலரும் நமது வேண்டுகோளைச் செவி மடுப்பவர்களாய் விளங்குகின்றனர். எனவே, பிறருக்கும் நாம் அஞ்சவேண்டியவர்களாகவே இருக்கிறோம். அப்படியே அவர்களை நாம் நம்பவும் செய்யலாம். ஆண்டவனுடைய அபரிமிதமான அதிகாரத்தில் மற்றவர்களும் அதிகாரம் செலுத்தக் கூடியவர்களாக இருக்கின்றனர். ஆகவே, அவர்களுடைய உத்தரவும் சட்டங்களும் பின் பற்றி நடக்க லாயிக்கானவைகளாகவே இருக்கின்றன என்பது.

இதற்கு விடை பூமியிலும் வானத்திலும் காணப்படும் ஒவ்வொரு வஸ்துவும் கூறுவதாவது: இங்ஙனம் கூறக்கூடிய நீங்கள் கூறும் இக் கூற்றானது உண்மைக்கு மாற்றமானதாயிருக்கிறது என்பதே.

எனவே, நீவிர் நன்கு நிதானமாய்க் கவனித்துப் பார்ப்பீர்களாக. இங்ஙனம் பொய்ம்மொழி கூறும் மக்களும் அஃது உண்மைதானென நம்பி அதன்படியே தங்கள் வாழ்க்கையை நடாத்திவரும் மனிதர்களும் இவ்வுலகிலும் மறுவுலகிலும் எங்ஙனம் செழித்தோங்கி நற்பெயருடன் சிறப்புற்று விளங்குதல் சாலும்? இத்தகையோருக்கு ஆண்டவன் தன் அருளினால் சிறிதுகாலம் தாமதமளித்து வைத்திருக்கின்றான். அவன் கூறியபடி இவர்களுக்கு உணவையும், ஆகாரங்களையும் அளிக்கும்படி ஏற்பாடும் செய்துள்ளான். இதற்கிணங்க வானமும் பூமியும் இவற்றிற்கிடையே காணப்படும் வஸ்துக்களும் மனமில்லாமற் போயினும் ஏதோ ஒரு சிறிது இத்தீயவர்களுக்கும் தந்து உபகாரம் செய்கின்றன. இவ்வுபகாரம் அவனுக்குரிய பாத்தியதையின் மீதல்ல. நல்லோர்க்குப் பெய்யும் மழை எல்லோர்க்கும் என்பதற்கொப்ப இவர்களுக்கும் ஒரு சிறிது உதவியை அவை அளிக்கின்றன. இஃதிங்ஙனமிருக்க.

மேற்குறிப்பிட்டபடி வித்தியாசம் இரண்டு விதமாய் அமைந்திருக்கிறது. பரிசுத்த வாக்கியமாம் கலிமா உரைக்கும் போது அது செழித்துச் சரியான நற்பயனையே அளிக்க வல்லதாயிருக்கிறது. கலிமாவினால் உலகத்தில் சாந்தி நிலவும். நன்மையும் சத்தியமும் நியாயமும் உயர்ந்தோங்கும். ஆண்டவனின் அடியார்கள் இதனால் அதிகப் பிரயோசனமே அடைவார்கள். வெறுக்கத் தக்க வாக்கியங்களை எத்துணை தூரம் நல்ல முறையில், நாம் வளர்த்து வந்தாலும் முதன் முதலாய் அவை செழித்தோங்குதல் சாலாது. அவற்றினின்று கசப்பானவையும் வெறுக்கத் தக்கவையுமான' பயன்களே தோன்றும். அவற்றின் ஒவ்வொரு நரம்பிலும் விஷமே நிறைந்திருக்கும். நீங்களே உங்கள் கண்களால் பார்க்கலாம். நன்னம்பிக்கையற்ற மக்களும் ஆண்டவனுக்கு இணைவைக்கும் முஷ்ரிக்குகளும் ஆண்டவனே இல்லை யென அறையும் லோகாயதர்களும் வசிக்கும் பாகங்களில் எது உச்சஸ்தானத்தை அடைந்திருக்கிறது என்பதைக் கவனித்துப் பாருங்கள். அங்கு ஒருவன் மற்றவனைக் கிழித்துத் தின்னத் தயாராய்க் கொண்டிருக்கிறான். கூட்டங் கூட்டமாய் மக்கள் நாசமடையும் சாதனங்களைத் தேடிக்கொண்டிருக்கிறான். விஷப் புகை தயாராகிறது. ஒரு கூட்டத்தார் மற்றொரு கூட்டத்தாரை அடியோடழிக்கக் கங்கணம் கட்டுகின்றார்கள். அதிக பலமுள்ளவன் பலமற்றவனை அடிமையாக்கிக் கொள்ளுகிறான். பலஹீனமானவர்கள் இராணுவம், பொலீஸ், ஜெயில், தூக்கு முதலியவைகளின் பயத்தால் சக்தி யுள்ளவர்களின் அக்கிரமங்களைச் சகிக்க வேண்டியவர்களாயுளர்.

பின்னர், அச் சமூகத்தாரின் அந்தரங்க நிலைமை யாதென்பதையும் கவனித்துப்பாருங்கள். அவர்களுடைய குணங்களோ ஷைத்தானும் நாணமடையக் கூடிய முறையில் அமைந்திருக்கிறது. மிருகங்களும் கூடச் செய்யாத காரியங்களை அவர்கள் செய்கின்றனர். குழந்தை பெறும் தாய்மார்கள் தங்கள் சுக சௌகரிய நற் பெயரைக் காரணமாய்க் கொண்டு சிசுஹத்தி செய்கின்றனர். மணவாளன் தன் மனைவி மற்றொருவருடன் சேர்ந்து போவதைச் சாதாரணமாக என்று

# இந்திய சுதேச நாடுகளும் அவற்றின் அரசர்களும்
## INDIAN STATES & THEIR PRINCES

இந்தியா ஓர் உபகண்டம் என்பதை, அதன் அமைப்பு, மக்கள் இனம், அவர்கள் பேசும் மொழி முதலியவற்றிலிருந்து நீங்கள் அறிந்து கொண்டிருப்பீர்கள். இப்போது இந்தியாவில் பிரிட்டிஷாரின் நேர் ஆட்சியில் இருக்கும் நாடுகளைத்தவிர, சிற்றரசர்களின் ஆளுகையில் எத்தனை நாடுகள் இருக்கின்றன ? எவ்வளவு விஸ்தீரணமுள்ள பிரதேசத்தைச் சிற்றரசர்கள் ஆட்சி புரிகின்றனர் என்னும் விவரங்களையும் நீங்கள் தெரிந்து கொள்ளவேண்டும்.

இந்தியாவில் 584 சுதேச நாடுகள் இருக்கின்றன. இவை அனைத்தும் சிற்றரசர்களின் ஆளுகையில் இருக்கின்றன எனினும் இந்த நாடுகள் அனைத்தும் பிரிட்டிஷாரின் ஆட்சிக் குட்பட்டவைகளே.

இந்த 584 சிற்றரசர்களும் 7,12,508 சதுரமைல் விஸ்தீரணமுள்ள பிரதேசத்தை ஆளுகின்றனர். இவர்கள் ஆட்சியில் 8,13,10,845 மக்கள் இருக்கின்றனர்.

இந்தியாவில் முதன்மை ஸ்தானம் வகிக்கும் சுதேசநாடு ஹைதராபாத் ஒன்றுதான். ஹைதராபாதைவிடக் காஷ்மீர் விஸ்தீரணத்தில் பெரியதெனினும் மற்ற அம்சங்களில் ஹைதராபாத் தான் பெரியதாகும். வர்த்தக முறையில் நன்கு அபிவிருத்தி அடைந்திருக்கும் நாடுகள் தென் இந்தியாவில் மைசூரும், திருவாங்கூருமே. மேற்கு இந்தியாவில் பரோடா, மத்திய இந்தியாவில் குவாலியர், இந்தூர் போன்ற சுதேச நாடுகளும் வர்த்தகத்தில் சிறப்புற்றவைகளே.

ஹைதராபாத் சுதேச நாட்டின் ஜனத்தொகை 1,44,36,148 ஆகும். விஸ்தீரணம் 82,698 சதுர மைல்கள் ஆகும். வருட வருமானம் 8,42,13,000 ரூபாய். விஸ்தீரண அளவில் பெரிய சுதேசநாடு காஷ்மீர்தான். அது 85, 885 சதுரமைல் விஸ்தீரணமுடையது. ஜனத்தொகையிலும் வருமானத்திலும் ஹைதராபாத் முதலில் நிற்கிறது. இரண்டாவதாக மைசூர் வருகிறது. மைசூரின் ஜனத்தொகை 65,57,302. வருட வருமானம் ரூ. 3,54,41,000. விஸ்தீரணமோ 29,475 சதுர மைல்களே.

$1\frac{1}{2}$ கோடி மக்களை ஜனத்தொகையாகவும், $8\frac{1}{2}$ கோடி ரூபாயை வருட வருமானமாகவும் கொண்ட ஹைதராபாத் சுதேச நாடு முதல் 27 பேரையே ஜனத்தொகையாகவும், 80 ரூபாயே வருட வருமானமாகவும் கொண்ட பில்பாரி சுதேச நாடுவரை பலவிதமான சுதேசி நாடுகள் நம் இந்தியாவில் இருக்கின்றன.

இந்தச் சுதேச அரசர்கள் தங்கள் உள்நாட்டு விஷயங்களைத் தாங்களே கவனித்துக் கொள்வார்கள்; சட்ட திட்டங்கள் அமைத்துக் கொள்வார்கள்; வரிவசூல் செய்து கொள்வார்கள்; சொந்த இராணுவங்கள் வைத்துக் கொள்வார்கள். ஆனால் இவையனைத்தும் ஒரு பிரிட்டிஷ் 'ரெஸிடெண்ட் மேற்பார்வையிலிருக்கும். அன்னிய நாட்டு விஷயங்களில் இவர்களுக்கு உரிமையில்லை. இவர்களுடைய பொது விஷயங்களைக் கவனிக்கவென்று ஒரு சபை இருக்கிறது. அதற்கு நரேந்திர மண்டலம் என்பது பெயர்

இத்துணைச் சுதேச நாடுகளையும் அவற்றின் அரசர்களையும் கொண்ட ஒரு பெரிய உபகண்டத்தை ஒரு நாடுதான் என்று கூறினால் அது நகைப்பிற் கிடமான கூற்றல்லவா? ஒரே ஒரு ஹைதராபாத் மட்டும் இங்கிலாந்தையும் ஸ்காட்லந்தையும் சேர்த்தால் எவ்வளவு விஸ்தீரணமாகுமோ அவ்வளவு விஸ்தீரணமுடையதா யிருக்கிறதே. இது போன்று பல நாடுகளுடைய இவ்வுபகண்டம் ஒரே நாடாக முடியுமா ? யோசித்துப் பாருங்கள் !

---

(191-ம் பக்கத்தொடர்)

கிறான். இப்படியே இவன் அவனுடைய மனைவியை அழைத்தேகுகிறான். நிர்வாணிகளுக்குச் சங்கங்களும் கிளப்களும் அமைக்கின்றனர். அவற்றில் ஆடவர் பெண்டிர் என்ற வித்தியாசமில்லாமல் ஒருவர் முன் மற்றொருவர் சாதாரணமாய் நிர்வாணமாக அலைந்து திரிகின்றனர். செல்வச் சீமான்களாய் உள்ளவர்கள் கொடிய வட்டியின் காரணமாய் ஏழைகளின் உதிரத்தை உறிஞ்சுகின்றனர். மேலும் தனவந்தர்கள் தனமற்றவர்களைத் தங்களுடைய சொந்த ஊழியரெனக் கருதித் தகாத வேலைகளையெல்லாம் அவர்கள்பாலிருந்து பெறுகின்றனர். சுருங்கக் கூறின், அல்லாஹ்வின் மீது பூரண நம்பிக்கையும் அவன் அச்சமும் மனத்தில் இல்லாமல் கண்டதே காட்சி கொண்டதே கோலம் என்று நடக்கும் மக்களின் நிலைமை மகா மோசமாய் உலகில் அமைந்திருக்கிறதெனலாம். இதற்கு உதாரணம் இங்கு அதிகம் வேண்டியதின்று.

Best copy available

# ஹதீஸ் - நூன் முகம்
## HADIS—INTRODUCTION

(முன் தொடர்)

IX

### தற்காலம் வழங்கும் ஹதீஸுத் திரட்டுக்களின் சிறப்பிலக்கணங்கள்

#### (1) இஸ்னுத் அல்லது அறிவிப்பாளர் பரம்பரைத் தொடர்

மற்றோர் அதிகாரத்தில் விவரிக்கப்பட விருக்கிற ஹதீஸுத் திரட்டுக்களில், ஒவ்வொரு திரட்டில் அடங்கின ஒவ்வொரு ஹதீஸுக்கு முன்னரும், ஹிஜ்ரீ நான்காம் நூற்றுண்டின் இறுதி வரை, நபிபெருமான்(ஸல்) அல்லது அவர்கள் தோழர் முதல் ஹதீஸைத் தொகுத்தவருக்குக் கூறியவர் ஈறாகவுள்ள இஸ்னுத் என்னும் கர்ணபரம்பரைத் தொடர்ப் பெயர்கள் சேர்க்கப்பட்டிருக்கின்றன. இது ஹதீஸுத் திரட்டுக்களிற் பெரும்பாலான வற்றின் இயல்பாகும்; இது, கற்பிதமானவைகளிலிருந்து மெய்யான ஹதீஸ்களைத் தெளிந் தெடுப்பதற்குப் படிப்பவர் வேண்டும் அநேக சாதனங்களைத் தருகிறது. ஆகையால் ஒரு ஹதீஸுக்கு, இஸ்னுத் என்றும் ம(த்)தன் (மூலவாக்கியம்) என்றும் இரு பகுதிகள் உள் ளன. மூலவாக்கியத்தின் அருகிலேயே அதன் (இஸ்னுத்) சாட்சியம் அல்லது ருஜுவும் இருக்கிறது. நம்பிக்கைக்குரிய ஆறு திரட்டுக்களின் ஆசிரியர், பிழையின்மையை மெய்ப் பிக்கும் பொருட்டு, ஒவ்வொரு மூல வாக்கியத்தோடும் இஸ்னுத் என்னும் ருஜுவை எங்கணும் சேர்த்திருக்கிறார்கள். இதிலிருந்து, ஹதீஸ்களைத் திரட்டுவதிலும் அவை களைப் பதிவு செய்வதிலும், தொகுப்பாசிரியர் எவ்வளவ நுண்ணிய கவனமும் எச்சரிக்கை யும் உள்ளவர்களாய் இருந்திருக்கிறார்கள் என்பதை யூகித்துணரலாம். இது இக்காலத் தவாது போக்கைப் போலன்றி மிக்க சாஸ்திர ரீதியான முறையாயிருந்தது. திரிதலுக்கும் இடைச் செருகலுக்கும் உள்ளான ஒவ்வொரு மூலவாசகமும் அதற்குரிய ருஜுவோடு எந்த நாட்டினருடைய சரித்திரத்திலும் காணப்படுவதில்லை. ஹதீஸின் விஷயமோ முற்றிலும் வேறுபட்டதாயிருந்தது. இஸ்னுத் என்பது, 'இறைவன் திருத்தூதர் இன் னின்னபடி கூறியருளினார்கள் என்று இன்னார் இன்னாருக்குச் சொல்லியதை, அவர் இன்னாருக்குச் சொன்னாரென்று, இன்னார் எனக்குச் சொன்னார்.' என்று முடியும் கர்ண பரம்பரையாகும். இந்த நவீன இஸ்னுத் முறையானது பல்வேறு ஹதீஸ்களையும் திருத்த மாகவும் உண்மையாகவும் நமக்குப் புலப்படுத்துகிறது; இவ்வித இலக்கணம் இல்லாததான அல்லது அறிவிப்பாளர் பரம்பரைத் தொடர் விடுபட்டுள்ள ஒரு ஹதீஸ் குறைவான ஆதார முள்ளதெனக் கருதப்பட்டது. இத்தகைய சாஸ்திர ரீதியான இஸ்னுத் (சாட்சி) முறை எங்கிருந்து முளைத்தது? இதற்குத் திட்டமான விடை பகர்தல் மிகவும் கஷ்டமாகும். கிரேக்கர், உரோமர், ஹிந்துக்கள், சீனர் ஆதியோரின் இலக்கியங்களில் இம்முறை ஒரு போதும் கையாளப்பட்டதில்லை. காக்டானியும், ஹெரோவிட்ஜும், ஹார்லீயும் இவ் விஷயத்தை ஓரளவு விவரித்திருப்பினும் அது திருப்தியளிக்கத் தக்கதாயில்லை. இம் முறை அராபியரிடத்திருந்து தோன்றியதென்று சிலரும் யூதரிடத்தென்று சிலரும் கூறுகி றார்கள். இஃது எவ்வாறிருப்பினும் இம்முறையை முதன் முதலாக அராபியரே கையாண் டிருக்கக் காண்கிறோம்; அவர்கள், கர்ணபரம்பரை வம்சாவளியைப் பற்றியும் அறிவிப்பாள ரின் யோக்கியதாம்சங்களைப் பற்றியும் எண்ணிறந்த இலக்கியங்களைத் தோற்றுவித்து, பல் வேறு வகைப்பட்ட இஸ்னுதின் தன்மையை நிச்சயித்து இம்முறையைச் சாஸ்திரோக்த மான ஓர் அஸ்திவாரத்தின்மீது நிறுவினார்கள். கர்ணபரம்பரைக் கலையைத் தோற்றுவித்த தைக் குறித்து அராபியர் பெருமை பாராட்டினது நியாயமாகும் என்று புரொபெஸர் மார் கோலியத் கூறுகிறார். கிட்டத்தட்ட ஹிஜ்ரீ நூறும் ஆண்டில் இந்த இஸ்னுத் முறை ஹதீஸ் இலக்கியத்திற்குப் பிரயோகிக்கப்பட்டது. அன்றியும் சரித்திரம் ...

திரம் போன்ற வேறு பிரிவைச் சார்ந்த கலைப்பயிற்சிக்கும் இம்முறைப் பிரயோகம் அராபிய ரால் விஸ்தரிக்கப்பட்டது; அறபு நாட்டில் எழுதப்படிக்கத் தெரிந்தவர் குறைவாயிருந்த தும், அறபிகளின் வியப்பிற்குரிய உறுதியான ஞாபக சக்தியும், ஒருகால், இதன் முதன்மை யான காரணங்களாய் இருந்திருக்கலாம்.

## (2) அறிவிப்பாளரின் நேர்மையான மதபக்தியும் பிழையற்ற அறிக்கைகளும்

இந்த அறிக்கையாளர்கள் மிக்க சத்தியவந்தர்களாகவும் ஹதீஸ்களைப்-பிழையில்லாது அறிவிப்பவர்களாகவும் இருந்தார்கள். ஒரு ஹதீஸ் சம்பந்தமாக வேற்றுமைப்பட்ட மற்றோர் அறிக்கையையாவது, அல்லது ஒரு வாக்கியத் தொடரில் அல்லது உயிர்க்குறிகளில் அற்ப வித்தியாசத்தையாவது அவர்கள் கேள்விப் படுந்தோறும், தாம் ஓர் அணுவளவேனும் கற்பனைசெய்யாமலும் விவரிக்காமலும் மிகைப்படுத்தாமலும் அவைகளை ஒப்பித்தார்கள். சத்தியத்தின்மீது அவர்களுக்கிருந்த மாசற்ற பற்றுதலை, 'மதப்பித்தம்' என்று தற்காலக் கீழ்த்திசைப் பாஷா வல்லுநரான ஐரோப்பியருட் சிலர் வர்ணித்திருக்கிறார்கள்.

## (3) கலீமாக்களின் உதவியையும் உத்தியோகஸ்தர்களின் தயவையும் எதிர்பாராமை

ஹதீஸ் தொகுத்தலின் மற்றோர் இலட்சணம் யாதெனின், அது கலீபாக்கள் அல்லது அதிகாரம் வகிக்கும் மற்றையோருடைய உதவியும் ஆதரவும் இல்லாமலே தொகுத்து விருத்தி செய்யப்பட்டதாகும். எல்லா உமையா வம்ச கலீபாக்களும் அப்பாஸீ வம்ச கலீபாக்களும் அரசாங்க விஷயங்களில் ஈடுபட்டிருந்தார்கள். இவ்விஷயத்தில் கவனம் செலுத்த அவர்களுக்கு அவகாசமில்லை. மதப் பற்று மிக்கவராயிருந்த சில கலீபாக்கள் ஏதாவதொரு காரணத்தால் தமது காலத்தை இவ்விஷய்த்திற் பயன்படுத்த முடியாதிருந்தனர். அறிவுக் கலை வளர்ச்சிக்குப் போஷகரான வேறு சிலர் தமது காலத்திருந்த மதத்தலைவர்களுடன் தாம் கொண்ட கருத்து வேற்றுமை காரணமாக இவ்விஷயத்தில் ஊக்கங் குன்றினவரா யிருந்தனர். இவர்களில் மஃமூன் ஒருவராவர்; இவர் கலாஞானப் பயிற்சிக்கு மாபெரும் போஷக கர்த்தாவாக இருந்தார்; அன்றியும் இவரது சிறந்த ஆட்சிக் காலத்தில் இஸ்லாமிய நாகரிகம் தனது உன்னத சிகரத்தை அடைந்தது. இமாம் மாலிக் முதல் இப்னு மாஜா ஈறாக உள்ள ஹதீஸுத் தொகுப்பாசிரியர் எவரும், கலீபாக்கள் அல்லது அவரது உத்தியோகஸ்தர் எவரிடத்திருந்தும் எத்தகைய உத்தியோகமாவது, உம்பளமாவது, ஜீவனும்ச உதவியாவது பெறவில்லை. நாம் பெற்றிருக்கிற ஹதீஸ் கிட்டத்தட்ட முழுவதும் முஸ்லிம் வேதாந்திகள் இயல்பாகப் பூண்டிருந்த மார்க்காபிமானத்தின் விளைவேயாகும். உதாரணமாக, இமாம் அஹ்மத் ஒரு சிறந்த ஹதீஸுத் தொகுப்பாசிரியராவர்; ஆயினும் அவர் கலீபாக்களோடு முரண்பட்ட சில கருத்துக்கள் உடையவராயிருந்தமையால் தொடர்ச்சியான சிறைவாசத்தாலும் கசையடியாலும் துன்புறுத்தப்பட்டார். இற்றை நாளில் உலகெங்கணும் வசிக்கும் கோடிக்கணக்கான மாந்தரால் பின்பற்றப் படுபவராகிய இமாம் அபூ ஹனீபா ஒரு சிறைச் சாலையில் அடைக்கப்பட்டார்; அவர் அவ்விடத்தே நெடுநாட் கிடந்து மாணித்தார். ஹதீஸுக் கலைக்குச் சிறந்த அதிகாரியான பேராசிரியர் என்று இப்பொழுது மதிக்கப்படுகிற இமாம் புகாரீ, அக்காலத்தின் கலீபாக்களால், மேலே கூறியதினும் குறைவான கொடுமைக்கும் துன்புறுத்தலுக்கும் ஆளாக்கப் பட்டவர் அன்று. 'என்ஸைக்கிளோபீடியா ஆப் இஸ்லாம்' என்னும் கிரந்தம் (பக். 91) கூறுவது வருமாறு:—"அக்காலத்தில் மதபக்தியும் சுயேச்சையும் படைத்த அநேகர் அரசாங்க ஊழியத்திற் புகுதல் அல்லது அதன் ஆதீனத்திற்கு உட்பட்டிருக்கும் ஒரு பதவி ஏற்றல் தவறு எனக் கருதி, அங்ஙனம் செய்ய மறுத்து விட்டார்கள்." அவர்களுடைய சுயேச்சையான கருத்துக்கள் அப்பாஸிய்யாக்கள் ஆட்சிக் காலத்தில் ஒரு சிறிதும் பழுதடையவில்லை. அவர்கள் ஒரு முஸ்லிம் அரசரின் கீழ் ஓர் உத்தியோகம்கூட ஏற்றாரில்லை. எனவே, ஹதீஸைத் தொகுத்தோர் ஏதேச்சையானவர்களாகவும், சுதந்திர புருடர்களாகவும், பட்சபாத மற்றவர்களாகவும், புறத்தியாரின் செல்வாக்குக்கு உட்படாதவர்களாகவும் இருந்தார்கள் என்று புலனாகிறது. அவர்கள் சத்தியமானதென்று தாம் எண்ணுவதிலிருந்து ஒரு மயிரிழையளவு தவறுவதைக் காட்டினும் தமது உயிரைத் தியாகஞ் செய்தலே உத்தமம் என்று கருதுவோரா யிருந்தனர்.



## (4) பெண்பாலரான அறிவிப்பாளர்

ஹதீஸின் பிரசாரத்திற் பெரும்பாலார் விசேடமாய் ஈடுபட்டிருத்தல் மற்றொரு முக்கிய அம்சமாகும். ஆடவர் வெளியுலகத்தின் பல்வேறு வகைப்பட்ட விஷயச் சிக்கலிற் கலந்துழல்பவராய் இருத்தலாலும் அதனால் அவர்கள் கேள்விப்படுகிறவற்றை மறந்துவிடக் காரணம் அதிகமாய் இருத்தலாலும், அவர்களைப் பார்க்கிலும் மாதருக்கு மிக்க உறுதியான ஞாபகசக்தி உண்டு. இதுவுமன்றிப் புருடருடைய மர்மங்களை மற்றையோரைவிட அவர் தம் மனைவியர்தாம் நன்கறிவார்கள். நபிபிரான்(ஸல்) அவர்கள் முதுமைப் பருவத்திற் பல மனைவியரை மணம் புரிந்ததன் காரணங்களுள் இதுவும் ஒன்றாகும். பெருமானார் அவர்களது நிரியாணத்திற்குப் பின் மறுமணம் புரியாது நெடுநாள் உயிர் வாழ்ந்திருந்த நம் பிராட்டிகள் மூலமாகவே ஹதீஸுக்கலை விரிவாகிப் பரவினதென்று கூறுதல் மிகையாகாது. அவர்கள் பெருமானார் அவர்களது குடும்ப அங்கத்தினராய் இருந்திராவிடின் நல்லொழுக்க நீதி உலகைச் சார்ந்த விலைமதிக்க வொண்ணாப் பொக்கிஷங்களை மானிடவர்க்கம் இழந்திருக்கும். நபிகணாதர்(ஸல்) அவர்கள் பரகதி அடைந்தவுடன் ஹஜ்றத் ஆயிஷா(றலி) அவர்களே அக்காலத்தின் ஹதீஸுக் கலைஞருள் மிகப் பிரதானமானவர்களாய் இருந்திருக்கிறார்கள். அப்பிராட்டியார் அதிகமான ஹதீஸ்களை அறிவித்த அறுவருள் ஒருவராவர். அவர்களது ஜீவியத்தின் பின்னர், பெருமானார் அவர்களின் பிராட்டியார்களாய் இருத்தலால், ஹஜ்றத் ஹப்ஸா, உம்மு ஹபீபா(றலி) முதலியோர் ஹதீஸின் முக்கியமான காவலர்களிற் சிலராகக் கருதப்பட்டிருக்கிறார்கள். ஐந்தாவது நூற்றாண்டில் கரீமா என்னும் மாது சிரோமணி புகாரியின் நூல் ஆராய்ச்சி சம்பந்தமான சிறந்த மேதாவியென ஏற்றுக் கொள்ளப்பட்டிருந் தார். பாத்திமா என்பார் ஹிஜ்ரீ ஆறாம் நூற்றாண்டில் வாழ்ந்த ஹதீஸுக் கலாஞானப் பண்டிதை ஆவர். ஏழாம் நூற்றாண்டிலும் எட்டாம் நூற்றாண்டிலும் ஜைனப் ஷஃரீயும், த(க்)கீ(க்)காவும், அஹ்மதின் புதல்வியார் ஜைனபும், முஹம்மதின் புத்திரி ஆயிஷாவும் பெண்பாலாரான முஹத்திஸ்களாய் விளங்கினர்.

(தொடரும்)

---

FOR GUARANTEED BLOCKS
LINE
HALF TONE
TRI-COLOUR
& MULTICOLOUR
CONSULT. PHONE. 3202.
M. C. APPASWAMY CHETTY & Co.
QUALITY BLOCK MAKERS
14, JONES STREET MANNADY MADRAS.
உத்தரவாதமுள்ள பிளாக்குகள்
லைன், ஆப்டோன், மூவர்ணம், பலவர்ணம் முதலிய எந்தவிதமான பிளாக்குகளாயினும் சரி, உறுதியாகவும், சுத்தமாகவும், அழகாகவும் செய்து கொடுக்கப்படும்.
ஒரு முறை பரீட்சித்துப் பாருங்கள்!
எம். ஸி. அப்பாசாமி செட்டி அண்ட் கோ.,
14, ஜோன்ஸ் தெரு, மண்ணடி, மதராஸ்.

# காக்ஸார் தலைவரின் வாழ்க்கை வரலாறு
## A SHORT BIOGRAPHY OF THE KAKSAR LEADER

(முஹம்மத் ஸர்பராஜ் கான், M. Sc., LL. B., சாலாரே, மந்துப், லாஹூர்)

(T. F. R. மஆலீ மொழிபெயர்ப்பு)

அல்லாமா மஷ்ரிகீ அவர்களால் தோற்றுவிக்கப்பட்ட காக்ஸார் இயக்கம் என்பதென்ன? லாகூரிலிருந்து வெளிவரும் அவ்வியக்கத்துக்குரிய "அல் இஸ்லாஹ்" பத்கிரிகையின் நோக்கமென்ன? என்னும் விவரங்கள் அந்த இயக்கத்தினைத் தோற்றுவித்தவர் எப்படிப்பட்டவர் என்ற வரலாற்றை வெளிப்படுத்தாதவரை, பொது ஜனங்களுக்கு விளங்கமாட்டா. அல்லாமா மஷ்ரிகீ அவர்களின் புகழ் சர்வ தேசங்களிலும் பிரக்யாதியடைந்து வியாபித்திருக்கிறது. ஜெர்மனி, பிரான்ஸ், அமெரிக்கா, இங்கிலாந்து முதலிய தேசங்களின் பெரும் பெரும் புரொபஸர்களும், ஸ்தாபனத்தார்களும், அல்லாமாவுடைய நூலாகிய "தஜ்கிரா"வை, இந்த நூற்றாண்டின் மாபெரும் நூல் என்று ஒத்துக்கொண்டு, தங்களுடைய யூனிவர்ஸிடி (சர்வ கலாசாலைகளில்) அதையொட்டிப் பிரசங்கங்கள் புரிந்திருக்கிறார்கள் என்பதொன்றே அவர் புகழை விளக்கப் போதுமானதாகும்.

ஆனால், இஸ்லாத்தின் சத்புத்திரராகிய அல்லாமா, ஒட்டிட்டுத் தைத்த தமது காக்கிச் சட்டையையும் காக்கி "பைஜாமா"வையும் உடுத்திக்கொண்டு, கையில் ஒரு பழைய பையுடன் தெருத்தெருவாய், நடந்து நான்கு வருஷகாலம் சுற்றியலைந்து கொண்டிருந்தார்; சில சமயம் ஏதோ ஒரு கடையினெதிரில் நின்று கொண்டும், சில சமயம் அழுக்கான இடத்திலிருந்து கொண்டும், சில சமயம் வேறொரு கடைத்தெருவில் நின்று கொண்டும், சில சமயம் நாற்றம்வீசும் தெருச் சந்திலிருந்து கொண்டும், தெருவில் போவோர் வருவோருக்கெல்லாம் வஅஜ்-உபதேசம்-செய்துகொண்டு மிருந்தார். ஆயினும் அச்சமயங்களில் அவர், தாம் யார் என்பதை மக்களுக்கு எடுத்துச் சொல்வதில்லை. ஆகையால், பொது மக்கள் "இவர் யாரோ ஒரு மௌலவீ; பேல்ச்சா தாங்கிச் செல்லும் பட்டாளத்தைத் தயார் செய்து கொண்டிருக்கிறார்; பாவம், இவருக்கு இதில் ஏதேனும் பிரயோஜன மிருக்கலாம்" என்று கூறுவார்கள். வேறு சிலர், "இதில் இவருக்கு ஏதேனும் இலக்ஷியம் இருக்கலாம்" என்றும், இன்னுஞ் சிலர், "கவர்ன்மெண்டாரே, இவரை இப்படி ஒரு பட்டாளம் தையார் செய்யும்படி கட்டளையிட்டிருக்கலாம்" என்றுமெல்லாம் பற்பல விதமாய்ப் பேசிக் கொள்வார்கள். விஷயமறியாத பாமர மக்கள், இவரை "மௌலவீஜீ" என்று அழைப்பார்கள். வண்டிக்காரர்கள் இவரை "பாபாஜீ" என்று அழைப்பார்கள்.

ஒரு சமயம் நன்கு எழுதப்படிக்கத் தெரிந்த ஒரு கனவான், அவ்வழியே போய்க் கொண்டிருந்த அல்லாமாவுடன் போய்ச் சேர்ந்துகொண்டார்; அப்படியே பேச்சுக் கொடுத்துக்கொண்டு, அல்லாமாவை என்னை விட்டுத் தனியே அழைத்துக்கொண்டுபோய்ப் பேசிக்கொண்டிருந்தார். பிறகு ஸலாம் செய்து விடைபெற்றுச் சென்றபின், நான் அல்லாமாவை நோக்கி, "அந்த மனிதர் தங்களிடம் ஏதோ இரகசியமாகச் சொன்னாரே, அதென்ன?" என்று கேட்டேன். அதற்கு அல்லாமா மஷ்ரிகீ, "அந்த மனிதர் என்னைத் தனியே அழைத்து, 'ஏதோ இயக்கம் ஆரம்பித்து நடத்துகிறீரே, இதில் உமக்கு இதுவரை ஏதாவது லாபம் கிடைத்தது; இல்லையா? இதனால் உமது ஜீவனோபாயம் நடக்கிறதா?' எனக் கேட்டார் என்று சொன்னார்கள். "சரி அதற்கு நீங்கள் என்ன பதில் சொன்னீர்கள்?" என்று நான், அல்லாமாவைக் கேட்டேன். அதற்கு அல்லாமா, "விஷயமே தெரியாத அந்த மனிதனுக்கு நான் என்ன பதில் சொல்ல முடியும்? ஆம், கொஞ்சநாள் சென்றால் இந்த இயக்கத்தினால் ஏதேனும் லாபம் கிடைக்கலாம் என்று சொல்லிவிட்டேன்" என்று கூறினார்கள்.

அந்தக் காலத்தில் அல்லாமா மஷ்ரிகீயைப்பற்றி ஜனங்கள் எம்மட்டும் அறியாதவர்களா யிருந்தார்கள் என்பதற்கு இது ஓர் உதாரணம். ஆகையினால்தான், "அல் இஸ்லாஹ்"வின் இந்த முதற் பிரசுரத்தில் (23-11-1934) அல்லாமாவின் வாழ்க்கை வரலாறுகளை எடுத்துக்கூற வேண்டியது அத்தியாவசியமாகிறது. லோகநாதர் நபிகள் நாயகம் ரஸூலுல்லாஹி(ஸல்) அவர்களைப் பற்றியுங்கூட, அக்காலத்து மக்கள், இப்படித் தான் கூறிக்கொண்டிருந்தனர். குர் ஆனில்,



"இவர் 'ரஸூல்' எப்படியாக முடியும்? சாப்பாட்டைப் புசித்து ...க் கடைத்தெருவில் சுற்றிக் ... கூறு...க்கிறாரே! நேரடியாக இவ...த்துக்கு ஒரு தேவதூதரே அனுப்பப்பட்டு, அவரே என் ஜனங்களுக்கு, எச்சரிக்கை செய்யக்கூடாது?" (ஸூரா: புர்கான்) என்று அருளப்பட்டுளது.

வாழ்க்கை வரலாறுகளைக் கொடுத்துதவுமாறு நான் அல்லாமா மஷ்ரிகீயிடம் பன்னாள் கேட்டுக்கொண்டிருந்தேன். சில பிரபல பத்திரிகைக்காரர் விடுத்த கோரிக்கைகளையும் அல்லாமா அவர்கள் தட்டிக் கழித்து விட்டனர். கொஞ்ச நாட்களுக்குமுன், சிந்து மாகாணத்துப் பத்திரிகைக்காரர் ஒருவர், "சிந்தி பாஷையில் நாங்கள் தங்கள் ஜீவிய சரிதையைப் பிரசுரிக்க விரும்புகிறோம்" என்று வேண்டிக்கொண்டார். அச்சமயம் அல்லாமா, அதற்கு இணங்கி, சில காகிதப் பிரதிகளை என்னிடம் கொடுத்து, "சரி, எழுதி அனுப்பி விடுங்கள்" என்று கட்டளையிட்டார்கள் அந்தச் சந்தர்ப்பத்தில் திரட்டிய வாழ்க்கை வரலாறு தான் இது. இந்த வியாஸம், அந்தச் சிந்தி பத்திரிகையின் பொருட்டால் தான் நமக்குக் கிடைத்தது. அந்தப் பத்திரிகையின் பெயர் "தொய்ரன் அபாபீல்" என்பதாகும். சிந்து மாகாண ஹைதராபாதிலிருந்து, ஹக்கீம் நூர் முஹம்மத் (மர்ஹூம்) அவர்களை ஆசிரியராகக் கொண்டு அது வெளிவந்து கொண்டிருந்தது.

இந்த விஷயங்களை யெல்லாம் நான் இங்கு வெறும் புகழ்ச்சிக்காகக் கூறவில்லை. அல்லாமா மஷ்ரிகீயின் ஜீவிய சரித்திரம் இதனால் பூர்த்தியாய் விட்டதென்றும் கருத வேண்டாம். அல்லாமா மஷ்ரிகீ எப்படிப்பட்டவர் என்பதை நான், அறிவாளிகளுக்குப் புதிதாய் அறிமுகப்படுத்த வேண்டிய அவசியமில்லை. இதன் நோக்கம் யாதெனில் இனயத்துல்லாகான் என்பவர் மௌலவீயுமல்ல; மௌலவீகளைக் கொண்டாடுபவருமல்ல. ஆனால், இவருடைய ஜீவியம் ஆண்டவன் பக்தியாலும், கீழ்நாடு (மஷ்ரிக்), மேல்நாடு (மக்ரிப்) இவற்றின் அனுபவங்களாலும் நிறைந்ததாகும். எனவே, இயற்கை நியதிப்படி, இவர் ஜீவியம் கீழ்நாடு, மேல்நாடு இரண்டின் நலன்களையும் ஒன்று சேர்த்து விட்டது.

### ஜனனமும், ஆரம்பக் கல்வியும்

இஸ்லாத்தின் சத்புத்திரராகிய அல்லாமா மஷ்ரிகீ, 'அடிமை தேசம்' எனப்படும் ஹிந்


ஆச்சர்யகரமான குணம்




"..........லோத்ராவைப் பரீக்ஷித்துப் பார்த்ததில் ஆச்சர்யகரமான குணமும் சுகமும் காண்கிறேன். இது ஒவ்வொரு ஸ்திரீயின் கையிலும் இருக்கத் தகுந்தது"

ஸ்ரீமதி லூசி கோயில் பிள்ளை
சோளங்கிபுரம்

வலியோடும், காலந்தவறியும், குறைவாகவும், அதிகமாகவும் மாதவிடாயாகுதல், வெள்ளை, மலட்டுத்தனம், மூர்ச்சையடைதல், இடுப்புவலி, தூக்கமின்மை, அஜீரணம், மலச்சிக்கல், இருமல், சுவாசகாசம், தலைவலி, முதுகுவலி முதலியவைகளை லோத்ரா குணப்படுத்தும்

தயாரிப்பவர்கள்:

கேஸரி குடீரம்

மதராஸ்

மதுரை பிராஞ்சு :—

2, ஜடாமுனி கோவில் தெரு,
மதுரை.

**துல்தானத்தில் அம்ரித்ஸர்** என்னும் ஊரில், **கி. பி. 1888-ம் ஹு ஆகஸ்ட் மீ 25-ந்தேதி பிறந்தார். இவரது தந்தைபெயர் கான் அதா முஹம்மத் கான்.** அவர், **அம்ரித்ஸர்** நகரின் **பிரபல தனவந்தரும்,** மாபெரும் **அறிவாளியு மாவார்; கீர்த்தி** பெற்ற புலவர் (ஷாயிர்) **களாகிய ஜௌக், காலிப், ஸய்யித் ஜமாலுத் தீன் அப்கானி, ஹூஹாருநவ்வாப் முதலிய வர்களுடைய தோழராய் இருந்தார். அவர்** இயற்றிய பல **நூல்களுக்கு அப்துல்லாஹ் அல் இமாமியும், அபுல் மகாரிம் ஆஜாதும் முகவுரைகள் எழுதியுள்ளார்கள்.** தம் **புத் திரரை (அல்லாமாவை) வளர்த்துப் பயிற்சி அளிக்கும் விஷயத்தில், தந்தை கான்ஸாஹிப் மிகப் பிரயாசையும் சிரத்தையும் எடுத்துக் கொள்வார். அல்லாமாவின் செல்வத் தாயா ரும் மிக்க அறிவாளியாகவும் உலக விவேகம் தெரிந்தவராகவு மிருந்தார். இங்ஙனம் நேர்மை பொருந்திய தாய்-தந்தையின் அறி வுப் பயிற்சியின்** பொருட்டால்தான் நம் அல் லாமா **அவர்கள்,** மிகச் சிறு பிராயத்திலேயே பெரும் பிரக்யாதி பெற்றவரானார்.

**அல்லாமா அவர்கள்,** ஆரம்பக்கல்வி கற்று **முடித்தபின், அம்ரித்ஸரில்** "இண்ட[illegible]ர்மீடி யட்" **பரீட்சையில்,** முதன்மையாகத் **தேறி, உபகாரச் சம்பளமும்** பெற்றார். அதன் பின், மேல்படிப்பைத் தொடர்ந்து பயில, லாஹூரு ருக்குச் சென்றார். அக்காலத்தில் அல்லாமா வுக்கு வயது பதினைந்தும் சில மாதங்களும் தாம் ஆயின. 1906-ம் ஹு அல்லாமா அவர்கள் லாஹூர் பார்மன் கிறிஸ்டியன் காலேஜில் மிக வெற்றிகரமாக பீ. ஏ. வகுப் பில் தேறிப் பட்டம் பெற்றுக்கொண்டார்; மேலும் உபகாரச் சம்பளம் கிடைக்கப் பெற் றார். அச்சமயம், அல்லாமா எவ்வளவு சமர்த் தராய் இருந்தாரென்றால், காலேஜ் புரொ பஸராகிய எஸ். என். குப்தாவே, "கணித சாஸ்திரத்தில் இவரைவிட அதிக சாமர்த்திய மான மாணவரை நான் பஞ்சாபிலேயே கண்டதில்லை" என்று அல்லாமாவைப் புகழ்ந்து பாராட்டியுள்ளார்.

## 18-வது வயதில் 'எம். ஏ.' பட்டம்

**அல்லாமா மஷ்ரிகீக்கு இன்னம் 19-வயது கூடப் பூர்த்தியாகவில்லை. அந்தச் சிறு பிராயத்திலேயே,** பஞ்சாப் **யூனிவர் ஸிட்டியில், கணித சாஸ்திரத்தில் தேர்ந்து, எம். ஏ. 'டிக்ரீ'** (பட்டம்) பெற்றுக்கொண் **டார். இந்தப் பரீக்ஷையில் அவர், மாகா ணத்து மாணவர்களெல்லோரினும் முதன் மையாய்த் தேர்ந்ததுமல்லாது, அந்த யூனிவர்** ஸிட்டியுடைய சரித்திரத்திலேயே, முதல் விடுத்தமாக 'முதல் [illegible]ானம்' பெற்[illegible] "முஸ்லிம்களுக்குக் க[illegible] [illegible]ர தெரி யும்? என இனி எவரும் ஏளனம் செய்ய முடி யாது" என்ற புகழ் மொழியும், அல்லாமா அவர்களுக்கு அளிக்கப்பட்டது.

அல்லாமா அவர்கள், இங்ஙனம் இணையற்ற அறிவாற்றல் பெற்றவரென்று தேர்ச்சி பெற் றது அவருக்கு இன்னும் கீர்த்தியை உண் டாக்கியது. அறிவாளிகள் பலர், அல்லாமா வைப் பாராட்டி, உபசார விருந்துகளும் அளித்தார்கள். சர்க்கார் அதிகாரிகள்கூட, அல்லாமாவைத் தங்கள் சமுகத்துக்கு வர வழைத்துப் பேசிப் பாராட்டினார்கள். மாகாண அதிகாரி (லாட்சாகிப்)கூட அல்லா மாவை நான்குமுறை தம் இடத்துக்கு வர வழைத்துப் பாராட்டு அளித்தார். பல பத்திரி கைகள் அல்லாமாவைப் பாராட்டிக் குறிப் புக்கள் எழுதின; "அல்லாமாவின் கல்வித் திறமை மாகாணத்துக்கே ஒரு பெருமை யளிப்பதாகும்" என்று பாராட்டின.

நாட்டில், அந்நாட்களில் உயர்தரக் கல்வி யில் தேர்ச்சி பெறுவது மிகமிக அருமையாய் இருந்து வந்தது. ஆதலின், அல்லாமா அவர் கள், மிக அபூர்வமான ஆற்றலுடன் தேர்ச்சி பெற்றார் என்ற விஷயம் பிரபலமானதும், அல்லாமாவுக்கு, அரசாங்க இலாக்காக்களி லும், வேறு பொது இடங்களிலும் உத்தி யோகங்கள் கொடுக்க முன்வந்தார்கள். ஆனால், அல்லாமா படிப்பை அத்துடன் நிறுத்திக் கொள்ளவில்லை. கல்விக் கடலின் கரையைக் காண வேண்டுமென்ற அவா பெருகியது. அவர், 'எம். ஏ.'யில் முதன் மையாய் வந்த ஊக்கம், இன்னமும் மேற் படிப்பில் தேர்ச்சி பெறத் தூண்டியது. எனவே, தமக்கு உத்தியோகங்கள் அளிக்க முன்வந்தவர்களுக்கு அவர் நன்றி தெரி வித்துவிட்டு, "சீனா தேசத்திலிருந்த போதி லும், கல்வியைத் தேடிச் செல்லுங்கள்" என்னும் ஹதீஸை அனுஷ்டிக்கலானார். அதற்கேற்ப, அல்லாமாவின் தந்தை, கவர்ன் மெண்ட்டாரின் உபகாரச் சம்பளத்தையும் எதிர்பாராமல், தமது சொந்தச் செலவி லேயே, அவரை இங்கிலாந்துக்கு அனுப்பி வைத்தார்.

## இங்கிலாந்திலும் வியப்பான வெற்றி

ஹிந்துஸ்தானத்தில், அல்லாமா அவர்க ளது கல்வி வாழ்க்கை, உண்மையில் வெற்றி யின் சரித்திரமாகவே விளங்கியது. இவ் வாறே அல்லாமா அவர்கள், இங்கிலாந்திலும்



தமது க[illegible] [illegible] நாட்டினார். அங்கு, சர்வகலா[illegible] கல்வி ஸ்தாபனத்திலும், அல் லாமா அவர்கள், இந்தியாவின் நற்பெயரைக் காப்பாற்றினார்கள்; மேனாட்டு அறிவாளிகள் அல்லாமாவின் அறிவாற்றலை ஒப்புக்கொண்ட னர். 1907-ம் வருஷம் முதல் 1912-ம் வரு ஷம் வரையில் இங்கிலாந்தின் பத்திரிகைக ளில் அல்லாமாவைப்பற்றிப் புகழ் மொழிகள் நிறைந்து வெளிவந்து கொண்டிருந்தன.

கி. பி. 1907-ம் ஆண்டில், அல்லாமா அவர்கள், கேம்பிரிட்ஜ் யூனிவர்ஸிட்டியின் கிரான்ஸ் காலேஜில் சேர்ந்து உயர்தரக் கல்வி பயிலலானார். முதல் ஆண்டிலேயே அவர் ஆங்கும் தமது கல்வியாற்றலை ஸ்தாபித்துக் கொண்டார். அக்காலை, கணித சாஸ் திரத்தில் ஸ்பெஷலாக ஒரு பரீக்ஷைப் போட்டி அங்கு நடைபெற்றது. அதில் பதினேழு மாணவர்கள் கலந்து கொண்டனர். அவர்களிலும் அல்லாமாவே முதன்மையாகத் தேர்ச்சிபெற்றார். இதற்காக அல்லாமாவுக்கு 70-பவுன் உபகாரச்சம்பளம் சன்மானமாக அளிக்கப்பட்டது. ஆகையால், ஆங்குள்ள எல்லாப் போதகாசிரியருடைய கவனமும் "இந்துஸ்தானத்தின் இந்தப் புத்தி சாலியான மாணவர்" பக்கம் திரும்பியது.

1909-ம் ஆண்டில், அல்லாமா மஷ்ரிகீ யவர்கள், கணித சாஸ்திரத்தில் உயர்தரப் பரீக்ஷைக்கு உட்கார்ந்தார். இந்தப் பரீக்ஷை தான் உலகத்திலேயே கணித சாஸ்திரத்தில் மாபெரும் பாண்டித்யப் பரீக்ஷையென்று ஒப்புக் கொள்ளப்படுகிறது. இது மூன்று வருஷப் பயிற்சி. ஆனால், அல்லாமா அவர் கள், அந்த மூவாண்டுப் பயிற்சியை இரண்டே ஆண்டில் முடித்து, அதிலும் முதல் ஸ்தானத்தில் தேர்ச்சிபெற்றார். இங் ஙனம் துரிதத்தேர்ச்சியின் பயனாய், "ரேங்கி லர்" (கணிதப் பஹில்வான்) என்னும் பட்ட மும் கிடைக்கப்பெற்றார். சென்ற காலத்தி லும் சரியே, நிகழ்காலத்திலும் சரியே, இந் தியா முழுவதிலுமிருக்கும் "ரேங்கிலர்" களின் எண்ணிக்கை ஒரு டஜனுக்கு மேலி ருக்காது. அதில் முஸ்லிம் ரேங்கிலர்களின் எண்ணிக்கை மூன்று அல்லது நான்குதா மிருக்கும்.

இந்தப் பரீக்ஷை வெற்றிக்காக, பிரஸ்தாப யூனிவர்ஸிட்டியினர். அல்லாமாவுக்கு இன்னுமோர் விசேஷ 'ஸ்காலர்ஷிப்' (பெருந் தொகை உபகாரச் சம்பளம்) கொடுத்துதவி னார்கள். இதனை "ஹேல்ச்சர் ஸ்காலர் ஷிப்" என்று சொல்வார்கள்.

மிகத் தீக்ஷண்ய புத்தி படைத்த அல்லாமா, தமது கல்விப் பயிற்சியை இத்துடன் மட்டும் நிறுத்திக் கொள்ளவில்லை. மற்றும் இரண்டு வருஷப் படிப்பையும் படித்துத் தேர்ந்து, 'டிரைபோஸ் ஆனர்ஸ்' முறையில், இன்னும் இரண்டு பரீக்ஷையில் அமர்ந்து தேர்ச்சி பெற்றார். சாதாரணமாய் "டிரைபோஸ் ஆனர்ஸு"க்"காகப் படிக்கவேண்டிய கால தவணை மூன்று வருஷங்களாகும். ஆனால் அல்லாமா அவர்கள், இரண்டே வருஷமாகச் சொற்பகாலத்தில் ஒருமிக்க ஆறு வருஷப் படிப்பையும் ஜீரணித்துக் கொண்டதோடு, முதல் ஸ்தானத்தையும் அடைந்து இணை யில்லா வெற்றியைப் பெற்றார். இஃது ஓர் ஆச்சரியமான சம்பவமாகும். அல்லாமாவின் அபூர்வமான சாமர்த்தியத்தை மெச்சி, "டெய்லி மிர்ரர்" என்னும் இங்கிலாந்துப் பத் திரிகை பின்வரும் புகழ் மொழியால் வர் ணித்திருக்கிறது:—

"இந்த வருஷம் கேம்பிரிட்ஜில், இனா யத்துல்லாகான் என்பவர், இரண்டு 'டிரைபோஸ்'களிலும் ஒரே காலத்தில் அமர்ந்து, அசாதாரணமான முறையில், தேர்ச்சி பெற்றுவிட்டார். இந்த மாதி ரிச் சம்பவம் இதற்குமுன் எப்பொழுதும் நிகழ்ந்தது கிடையாது" என்பதாகும்.

இவ்வாறே அல்லாமா மஷ்ரிகீயவர்கள், பி. ஓ. எல்., அதாவது "கீழ்நாட்டுமொழி" (அரபி, பார்ஸி)க்குரிய "டிரைபோஸிலும்" அமர்ந்து பரீக்ஷையில் தேறி முதல் ஸ்தானம் பெற்றார். இந்த மாதிரியான பிரயத்தனத்தை, இதுகாறும் எந்த ஹிந்துஸ்தானியனும் எடுத் துக்கொண்டு வெற்றி பெற்றது கிடையாது. அல்லாமா அவர்கள், அவற்றோடு, விஞ்ஞான சாஸ்திரத்திலும் தேர்ந்து 'பி. எஸ்ஸி. ஆனர்ஸ்' என்னும் பட்டமும் பெற்றார்; இதி லும் இவர், காலேஜ் மாணவர்களில் முதன் மையானவர் என்பதற்குரிய இறுமையும் பெற்றார். சுருக்கமாய்க் கூறவேண்டுமாயின் ஐந்து வருஷமாகிய சொற்ப காலத்தில் அல் லாமா அவர்கள், நான்கு பரீக்ஷைகளில் தேர்ந்து 'ஆனர்ஸ்' பட்டம் பெற்றார். இது ஒரு சாதாரண விஷயமல்ல. ஓர் இந்தியர் அதிலும் ஒரு முஸ்லிம் இங்ஙனம் இங்கிலாந் தின் கல்வித்துறையிலே ஒரு "புதுமை" பெற்றுவிட்டது எங்கும் ஒரே பேச்சாய் விளங்கியது. எனவே, பத்திரிகைப் பிரதி நிதிகள் பலர், அல்லாமாவுடைய திருச்சமு கத்திற்கு வந்து போகத் தொடங்கினார்கள். அல்லாமாவுடைய வாழ்க்கை வரலாறுகளை யும், அவரது அரிய கட்டுரைகளையும் வாங்கித்

# யுத்தவீரர் மஹான்(ஸல்)

## THE PROPHET—A WARRIOR

(ஆலிஜனுப் H.M.S. அப்துல் காதிர் ஷாதிலீ, காரைக்கால்)

உலக மக்கள் அனைவரும் ஓரினத்தவராய் ஒரே கொள்கையினராய் ஒரேவித உரிமை பெற்றவராய் இலங்கி, சமாதானமான வாழ்க்கையைப் பின்பற்றி, சாயுச்சிய மடைவதற்கு இறைவனால் அனுப்பப்பட்ட இந்த முஹம்மது நபி (ஸல்) அவர்கள் ஒரு யுத்த வீரர். அவர்கள் எஞ்ஞான்றும் வலுவில் எவருடனும் யுத்தத்திற்குச் சென்றதில்லை. எம்பெருமானார் (ஸல்) அவர்கள் சிறிதும் பெரிதுமாக 80 யுத்தங்கள் புரிந்திருக்கிறார்கள். அவர்கள் புரிந்த யுத்தமனைத்தும் தற்காப்பினிமித்தத்தினாலேயே யல்லாது வேறு எந்த வகையாலு மன்றாம்.

இவ்வுலகத்தில் நீங்கள் எத்தனையோ யுத்த வீரர்களைப் பற்றிக் கேள்வியுற்றிருக்கலாம், படித்திருக்கலாம், பார்த்திருக்கலாம். அவர்களிடத்தி லெல்லாம் வேக வெறி கொண்ட ஒரே வெறுந் தைரியந்தானிருந்து வந்தது. இன்னும் அந்த வீரர்களெல்லாம் தாங்கள் கொண்டிருந்த லக்ஷியத்தை எந்த ஒரு வகையிலும் பூர்த்தி செய்து கொள்ள முடியாமல், வீரியத்தை வீணே விரயஞ் செய்து வெற்றியிலாது மறைந்து போயினர். ஆனால் இந்த வீரரிடம் (நபி பிரானிடம்) உண்மையான மனோதிடமும், எதிரியைக் கொல்லாமல் கொன்று வெற்றி பெறும் தயாளகுண மன்னிப்பு என்னும் கண்ணிய மிக்க தைரியமும் ஒருங்கே அமையப் பெற்றிருந்தமையால் அவர்கள் கொண்ட இலக்ஷியத்தில் ஒரு சுத்த வீரராக நின்று வெற்றி பெற்றிருக்கிறார்கள்.

ஹுனைன் யுத்தத்தில் நபிகள் பிரான் (ஸல்) அவர்களின் தலைமையின்கீழ் 12,000 முஸ்லிம் வீரர்கள் நின்று யுத்தம் புரிந்தார்கள். ஆனால் எதிரியின் படை அதிகமாயிருந்த படியாலும், தக்க யுத்தப் பயிற்சி பெற்றிருந்தமையாலும், முஸ்லிம் சேனைகள் பின்வாங்க நேரிட்டது. இப்படிப் பட்ட அபாயகரமான சமயத்தில் நபிகள் கோமான் (ஸல்) அவர்கள் மாத்திரம் புறமுதுகு காட்டாமல் நின்ற நிலையில் தங்களுடைய குதிரையை விட்டுக் கீழிறங்கி எதிரிகளின் சேனையை நோக்கி, "நான்தான் ஆண்டவன் தூதர். அதில் யாதொரு பொய்யுமில்லை; நான் அப்துல் முத்தலிபுடைய புத்திரன்" என்று உரக்கக் கூவி எதிரிகளிடம் முன்னேக்கிச் சென்றார்கள். இந்த வீர கர்ஜனையைச் சிதறியோடிய முஸ்லிம் படைகள் செவி மடுத்த மாத்திரத்தில் வீர உணர்ச்சி ஏற்பட்டுத் தைரியமாய் நின்று யுத்தம் புரிந்தார்கள்.

இப்பூவுலகின் கண் அவதரித்த எல்லா மத போதகர்களைக் காட்டிலும் இஸ்லா மத ஸ்தாபகரான எம்பிரான் (ஸல்) அவர்கள் உஹது யுத்த மைதானத்தில் எதிரிகளால் தாக்கப்பட்டு ஒரு குழியில் வீழ்ந்து விட்டார்கள். அப்போது அவர்களுக்கு 80 காயங்கள் ஏற்பட்டிருந்தன. முகத்திலோ இரத்தம் தாரை தாரையாக வழிந்தோடிக் கொண்டிருந்தன. அப்பொழுதும் அவர்கள் தங்களுடைய தைரியத்தை இழக்க வில்லை.

இஸ்லாத்தின் ஆச்சரிய மிக்க வீரர் (ஸல்) அவர்களுக்கு நபிப்பட்டம் கிடைத்த ஆரம்ப நாட்களில் அவர்களுடைய தீனுல் இஸ்லாத்தில் சேர்ந்தவர்கள் 75 பேர்களாவர். ஆனால் அவர்களை இஸ்லாத்தை விட்டு விட்டு அவர்களுடைய பழைய மூதாதைகள் பூஜித்தவைகளையே பூஜிக்க வேண்டு மென்று எதிரிகள் தொந்தரை செய்தார்கள். அவர்களை வதை செய்ய வேண்டுமென்றும் ஒரு நாள் ஒரு சதி செய்யப்பட்டது. அதை யறிந்த நமது அருமந்த திரு நபி பெருமான் முஹம்மது (ஸல்)



[illegible] கூட்டி எல்லா முஸ்லிம் [illegible] மதீனாவுக்குச் செல்லும்படி [illegible]ட்டளையிட்டார்கள். அவர்களெல்லாம் பத்திரமாகவும் சுகமாகவும், போய்ச் சேர்ந்த பின்பே தாங்கள் மக்காவை விட்டு மதீனாவுக்குச் சென்றார்கள்.

நபிகள் பிரான்(ஸல்) அவர்கள் யுத்த காலங்களில் எல்லோரைக் காட்டிலும் அதிகமாக எதிரிகளிடம் நெருங்கி யுத்தம் செய்வார்களென்று செய்யிதினா அலி (ரலி) அவர்கள் ஓலமிட்டிருக்கிறார்கள்.

யுத்தம் அதி மும்மரமாக நடந்து கொண்டிருக்கும்போது உலக தயாளர் முர்ஸல் கரசர் முஹம்மது (ஸல்) அவர்கள் சமீபத்தில் எவர் நிற்கின்றாரோ அவருக்கு விசேஷ வீர உணர்ச்சி ஏற்பட்டு அதிகம் போர் புரிய ஆரம்பிப்பார்கள்.

உலகத்திற்கு அறிவச்சுடர் கொளுத்தி, "அதிக்கிரம புரி" ஆகவிருந்த உலகத்தை "புண்ணியபுரி" யாக்கி வைத்த கண்ணிய புருஷர் மாண்பு மிகு மகானுபாவர் மக்காவின் அதிபர் யாசீன் நபி ராஜர் முஹம்மது (ஸல்) அவர்கள் தற்காப்பினி மித்தமே யுத்தம் புரிந்து வந்தார்களே யல்லாது வீரியத்தில் எவருடனும், எந்த வர்க்கத்தாருடனும், எந்தத் தேசத்தாருடனும் யுத்தம் செய்ததே இல்லை என்பதை மீண்டும் வற்புறுத்திக் கூற விரும்புகின்றேன். மேலும் அவர்கள் புரிந்த யுத்தங்களெல்லாம் தர்ம யுத்தமேயன்றி நாடு பிடிக்கும் யுத்தமுமன்று; செல்வம் சுரண்டும் போருமன்றாம். இக் காலத்தில் நடந்தேறிவரும் யுத்தத்தில் சரணமடைந்த கைதிகளை ஆரணியத்தில் வசிக்கும் விலங்கினங்களைப் பார்க்கிலும் கேடாக நடாத்தும் கொடுமையைப் போன்று அக் காலத்தில் முத்து நபி (ஸல்) யுத்தக் கைதிகளுக்கு எவ்விதத் தீங்கும் செய்ய வில்லை. அதற்குப் பதிலாக யுத்தத்தில் பிடிபட்ட கைதிகளை மிக்க கண்ணியமான முறையில் நடாத்தியது மன்றி அவர்களை மன்னித்தும் விட்டிருக்கிறார்கள். என்னே கருணை வள்ளலின் காருண்யம்!

ஹுனைன் யுத்தத்தில் பிடிபட்ட அநேகமாயிரங் கைதிகளையும் எந்தவித ஈடு மின்றி மன்னித்து விட்டார்கள். "பனூ முஸ்தலிக்" யுத்தத்தில் கைதியான 300 பேரையும் விடுதலை செய்து விட்டார்கள்.

பத்ரு யுத்தத்தில் பிடிபட்ட 70 பேரையும் மன்னித்து விட்டார்கள். தானிம் மலைப்பிரதேச வாசக் கைதிகளான 80 நபர்களையும் எவ்வித ஈடும் பெறாமல் மன்னித்து விட்டார்கள்.

முள்நிறைந்த ரோஜாப்பூச் செடியில் புஷ்பித்த ரோஜா மலரைப் போன்ற அழகிய ஆணிமுத்தாய் அவதரித்த எம்பெருமானார் (ஸல்) அவர்கள் திருமக்க மாநகரத்தைக் கைப்பற்றிய சமயம் எதிரிகள் அனைவரும் ஒன்றும் பேச நாவெழாமல் மௌனத்துடன் தலைகுனிந்து நின்றதைக் கண்ட நாயகம் ரசூலே அரபீ(ஸல்), அவர்களை நோக்கி, "நான் உங்களை என்ன விதம் நடத்தப் போகிறேனென்பதை நீங்கள் அறிவீர்களா?" என்று கேட்க, அதற்கு அவர்கள், "நீர் கண்ணியமும் தயாள குணமும் படைத்த சகோதராகவே காணப்படுகிறீர்" என்று மிகப் பணிந்து பதிலிறுத்தார்கள். "இன்றைக்கு உங்களுக் கொன்றும் நிபந்தனை இல்லை, நீங்கள் எல்லோரும் விடுவிக்கப் பட்டீர்கள்" என்று முழு உலக நியாயாதிபரான எம்பெருமானார்(ஸல்) அவர்கள் தாராளச் சிந்தையுடன் கூறி அவர்களை மன்னித்து விட்டார்கள். அந்த எதிரிகளுக்கிடையில் 13 வருஷம் இடைவிடாது நபிகள் பிரான் (ஸல்) அவர்களைத் துன்புறுத்தி வந்த அரபித் தலைவர் "உத்பா" என்பவரின் குமாரி "ஹிந்தா" என்பவளும் காணப் பட்டாள். (இவள்தான் நபி பெருமானின் சிறிய தந்தையான ஹம்ஜா(ரலி) அவர்களின் ஈரலைக் கடித்துத் தின்னுவே னென்று சபதங் கூறிப் போர்க் களத்துக்குச் சென்று அப்படியே செய்த ஸ்திரீயாவாள்.) அவள் நபிகள் திலகம்(ஸல்) முன் வரப் பயந்து தன்னை இன்னாரென்று அறிந்து கொள்ளா திருக்கும் பொருட்டு முக மூடியிட்டுக் கொண்டு வந்து நின்றாள். இதை ஏகத்துவத் தூதர்(ஸல்) அறிந்து, அவள் முன் செய்த தீங்குகளைக் குறித்துக் கொஞ்சமும் கிளறாமல் அப்படியே மன்னித்தும் விட்டார்கள். இந்த மாதே இஸ்லாமிய இராஜ்ஜியத்தைப் பிற்காலத்தில் அரசாண்ட முதலாலது அரச வம்சத்தின் தாயாய் நின்று விளங்கினார்.

(199-ம் பக்கத்தொடர்)

தங்கள் பத்திரிகைகளில் பெருமையோடு பிரசுரிக்கலானார்கள். ஐந்தாறு வருஷங்களில் மிக அபூர்வமுறையில் நமது 'சைன்ஸ் காரர்' (அல்லாமா) பெற்ற விசேஷ ஜயத்தைப்பற்றி, இங்கிலாந்தின் பிரபல பத்திரிகைகளான, "எம்பயர் ரிவியூ," "வெஸ்ட்மினிஸ்டர் ரிவியூ" முதலியவற்றுக்கும் பொதுவாய் உலகத்தில் மிகப் பெரும் பத்திரிகையான "லண்டன் டைம்ஸு"க்கும் அல்லாமா அவர்கள், 'வியாஸகர்த்தா'வாக இருந்துள்ளார். மேலும், உலகத்தின் பெரும் பெருந்தலைவர்களும், அப்பத்திரிகைகளில் அல்லாமாவின் வியாசங்களைப் படித்துப் பாராட்டி வாழ்த்துரை அனுப்பியுள்ளார்கள்.

(தொடரும்)

Get ZILVARO
THE WATCH OF SUPER QUALITY
E. A. WATCH CO.,

சத்திய திருநபி(ஸல்) அவர்களின் மற்றொரு பலமான எதிரி அபூ ஸுஃப்யானாக இருந்தார். இவர்தான் (Rome) ரோம் தேசச் சக்கரவர்த்தியின் முன்னிலையில் நபி பிரான்(ஸல்) அவர்களைப் பற்றித் தாறுமாறாகத் தூஷித்துப் பேசியவர். இவர் நபி பிரான்(ஸல்) முன் தைரியமாக வரப் பயந்து அப்பாஸை மத்தியஸ்தராகக் கொண்டு வந்தார். ஆனால் அவர்கள் எந்த மத்தியஸ்தத்தையும் விரும்பாமல் அபூ ஸுஃப்யானை மன்னித்து விட்டார்கள்.

நபிகள் பிரான்(ஸல்) அவர்களின் இன்னுமொரு பெரிய விரோதியான "ஹப்பார் பின் அஸ்வத்" என்பவனாவான். அவன் நபி பிரான்(ஸல்) அவர்களின் குமாரி ஜைனப் என்ற கர்ப்பவதியை உதைத்துக் கொன்ற குற்றத்துக்குப் பயந்து பாரசீகத்துக்கு ஓட எண்ணங் கொண்டான்; ஆனால் அவன் அவ்வாறு செய்யாமல் நாயகத்தின் எதிரில் வந்து, "ஓ இறைவன் தூதரே! நான் பாரசீகத்துக்கு ஓடிப்போக எண்ணங் கொண்டிருந்தேன். ஆனால் உங்கள் தாராளச் சிந்தையையும் மன்னிக்கும் குணத்தையும் பார்த்து நான் அவ்வாறு செல்லாமல் இங்குத் தங்கி விட்டேன். என்னைப்பற்றி நீங்கள் என்ன என்ன கேள்விப்பட்டீர்களோ அவையெல்லாம் உண்மைதான். நான் இப்பொழுது என்னுடைய குற்றங்களை உங்கள் முன்பாகச் சொல்லிக் காட்டி மன்னிப்புப் பெற வந்திருக்கிறேன்" என்று கூறினான். அவனையும் நபிகள் பிரான்(ஸல்) மன்னித்து விட்டார்கள்.

நபிகள் பிரான்(ஸல்) அவர்களின் வேறொரு மகா பெரிய விரோதியான அபூ ஜஹ்லின் குமாரர் இக்ரிமா என்பவர் எமன் தேசத்தில் ஓடிப்போய்ஒளிந்து கொண்டார். மாதைக் கண்ட அவருடைய துணைவி அவரைத்திரும்ப அழைத்துக் கொண்டு வந்து நபிகள் நாயகம்(ஸல்) அவர்களின் முன்னிலையில்நிறுத்தினர். அவர் வாய் திறந்து மன்னிப்புக் கேட்குமுன்னரே நபிகள் பிரான்(ஸல்) அவரை நோக்கி "ஓ பாரதேச வாசத்திற்குச் சென்றவரே! உமது வரவு எவ்வளவு நல்வரவாயிருக்கின்றது" என்று கூறி மன்னித்து விட்டார்கள்.

ஒரு சமயம் ஹாத்திம் தாயியின் குமாரி யுத்தத்தில் கைதியாக்கப் பட்டு நபிகள் நாதர்(ஸல்) அவர்களிடம் கொண்டு வரப் பட்டார். அதைக் கண்டு நபி பெருமான்(ஸல்) தயாள சிந்தையுடைய ஒரு பெரியாருடைய மகளைச் சிறை படுத்தக் கூடாதென்று சொல்லி [illegible] பெண்மணி [illegible] விருந்த மற்றக் கை[illegible]ன்னித்து விட்டார்கள். பழிக்குப்பழி வாங்கும் பாதகச் செயல்கள் இஸ்லாத்துக்கு முன் அரபிகளிடத்தில் தலை விரித்துத் தாண்டவ மாடிக் கொண்டிருந்தன. ஒருவன் ஒரு கொலை செய்து விடுவானாயின் அல்லது தன்புறுத்துவானாயின் அதற்குப் பதிலாக அவனையாவது அவனுடைய சந்ததியார்களை யாவது பழிக்குப் பழி வாங்கியே தீர்வார்கள்.

உலக சிரேஷ்டர் முகம்மது(ஸல்) அவர்களுக்குச் சகோதர முறையிலுள்ள "இப்னு ரபீ" என்னும் குழந்தையானது "பனூ ஸஅத்" குடும்பத்தாரின் பராமரிப்பிலிருந்து வந்தது. அக் குழந்தை ஒரு நாள் ஒரு பட்டிக்காட்டானால் கொல்லப்பட்டிறந்தது. அதற்கும் பழிக்குப் பழி வாங்க வில்லை. அப்படி வாங்குவதாயிருந்தாலும் அக் குழந்தைக்கு வாரீஸ்காரர் நபிகள் திலகமாகத் தானிருந்தார்கள். என்றாலும் அவர்கள் என்ன செய்தார்களென்று நினைக்கின்றீர்கள்? அவர்கள் தங்களுடைய இறுதிப் பிரசங்கத்தில் "அஞ்ஞான காலத்தில் நடந்து வந்த பழிக்குப்பழி வாங்கும் பாதகச் செயல்களும் இரத்த வெறிகளும் இது முதல் உங்கள் பால் விலக்கப் பட்டிருக்கின்றன. மேலும் எல்லாவித அகங்காரங்களும் இரத்த வெறிகளும் அப்துல் முத்தலிபின் பேரரும் ஹாரிதின் குமாரருமான இப்னு ரபியின் பரிதாபகரமான கொலையோடு ஒழிந்து போகுமாக என்று உபதேசம் புரிந்தார்கள். என்னே! நாயகத்தின் கருணை!


## வெட்டைச் சூடா?

அஞ்ச வேண்டாம்

'உஷ்ணசூநா' ஒரு வரப்பிரசாதம்

**வெட்டைச் சூடு, கணச் சூடு, மூலச் சூடு, தேககாங்கை, நீர்ச்சுருக்கு, உஷ்ண வயிற்றுவலி, கண் எரிச்சல், இருமல் முதலியவற்றை இது அற்புதமாய்ப் போக்கும். அதிக உஷ்ணத்தால் நீத்துக் கிடக்கும் தாதுவை "உஷ்ணசூநா" என்ற அற்புத மருந்து 2 நாட்களில் இறுக்கி விடும். கணச் சூட்டால் மெலிந்து போகிறவர்களுக்கு இது நல்ல பலன் தரும்.**

ஒருபுட்டி விலை ரூ. 1 வி. பி. செலவு வேறு

'நூருல் இஸ்லாம்' ஆபீஸ்.
65, பிராட்வே, மதராஸ்.





(மௌலவீ, ஸிராஜீ-பாகவீ, கீரனூர்)

(முன் இதழ்த் தொடர்)

22. அல்லாஹ் ஒருவனே மிகப் பெரியவன். அவனே யாவையும் அறிவான். அணுவுக்கு அணுவாக இருப்பவனும் அண்டத்துக்கு அண்டமாக இருப்பவனும் அவனே. அவனுக்குத் தெரியாத தொன்றில்லை. அகில கோடிகளை எல்லாம் ஆட்டிடுவோன் அவன். அவன் ஆட்ட எல்லாம் ஆடும். அவனன்றி ஓரணுவும் அசையாது.

23. மனமே! நீ ஜனித்தது முதல் எத்தனைப் பாபங்களில் மூழ்கி விட்டாய்? எத்தனைப் பெண்களைக் கற்பழித்து விட்டாய்? எத்தனைப்பேருக்குத் தீங்கு இழைத்து விட்டாய்? எத்தனை அனாதைச் சொத்துக்களை அபகரித்துக் கொண்டாய்? அந்தோ! என்னே உனது அறியாமை! மனமே! போனது போகட்டும். புத்தியாய் வாழ் மனமே. உனக்குத் தெரியாததை நான் சொல்ல வரவில்லை. நீ மறந்து விட்டதையே யான் ஞாபகப் படுத்துகிறேன்.

24. மனமே! அரும்பாடுபட்டுச் சம்பாதித்த அன்னியர் பொருளை அபகரிக்க நீ ஆசைப் படுகிறாய். ஆனால் உன் பொருளை வேறொருவன் அபகரிக்கச் சம்மதப் படுவாயா? பிறரை நிந்திக்க விரும்புகிறாய். ஆனால் உன்னை மற்றவர் நிந்திக்கப் பொறுப்பாயா? அன்னிய மாதர்களை ஆட்கொள்ள ஆசைப் படுகிறாய். ஆனால் உன் மனைவியை வேறொருவன் காதலிக்க விரும்புவாயா? மனமே! நன்கு சிந்தனை செய்து பார். உனக்கே வெட்கமாக இருக்கும்.

25. உடலில் உயிர் நீங்கும்போது ஒவ்வொருவருக்கும் தாந்தாம் செய்தவைகள் யாவும் ஒன்றன் பின் ஒன்றாக முறையே ஞாபகத்தில் எழும். அவ்வேளையில் கண்ணைப் புரட்டுவதும் திடுக்கிடுவதும் எதற் கெனில் தாம் வாழ்க்கையில் செய்த தூர்ச் செயல் நிரம்பியவைகளை நினைத்து வருந்துவதே. அந் நிலையில் பலவீன மானவன் போலும் அறிவிழந்தவன் போலும் மற்றவரது கண்களுக்குத் தோன்றினும் மரண வாய்ப் பட்டோருக்குத் தாம் செய்தவைகள் எல்லாம் மனத்தில் சித்திரம்போல் தோன்றும். அதற்காகவே அவ்வேளையில் அவஸ்தைப் படுகின்றனர். ஆனால் புண்ணிய கருமம் புரிந்த அண்ணலார் புன் சிரிப்புடன் இருப்பர்.

26. உடம்பில் நாடி ஓட்டம் நின்ற சொற்ப நேரத்திற்குப் பின்னர்த்தான் ஆவி நீங்குகிறது. அவ் ஆவி உஷ்ண முடைத்து ஆனமையாலே உடம்பு பனிக்கட்டி போல் குளிரடைகின்றது. நாடி ஓட்டம் நிற்பதற்கும் (ரூஹ்) ஆவி நீங்குவதற்கும் உள்ள இடை நேரத்திற்றான் மனைவி மக்களென்றும், பிள்ளை குட்டிகளென்றும், மனை-மாளிகையென்றும் துக்கப் படுவீர். ஆனால் நற் கருமத்தினர் அல்லாஹ் ஞாபகத்திலேயே இருந்து இறப்பர்.

27. காலமென்னும் கழுகானது நம் வாழ் நாட்களை உண்டு தொலைத்து விட மரணம் என்னும் இளிவரல் வந்தெய்துமன்றோ? ஆகவே வாழ்நாட்களைப் பாவத்தில் கழியாது இருத்தல் நன்று. பாவங்களுக்குக் காரணம் ஆசை. ஆதலின் ஆசை யென்னும் இருட் சேனையை யடர்ந்து எதிர்த்து வெல்லல் வேண்டும். தன்னைத்தான் வென்ற வீரனைப் பார்க்கினும் பெரிய வீரன் ஒருவன் உண்டோ?

28. மானிடனுக்கு ஆயுள் முடிவு காலம் வந்தடுத்து விடின் அழுதாலும் தொழுதாலும் அலறினாலும் எழுந்தாலும் மற்றும் என் செய்தாலும் உயிர் வாங்குபவர் இரங்கி விட்டுப் போவதில்லை. ஆகவே எப்படிப் பட்டவர்க்கும் மரணம் நிச்சயமாம் என்பது கருதி, யாக்கை நிலையாமையை மனங் கொள்ளாமல் தவஞ் செய்யாது வீணே காலத்தைக் கழிப்பது தவறு.

29. உன் நாவை உன் வசப் படுத்திக் கொள். யாருக்காகிலும் ஏதாவது செய்து கொடுப்பதாக வாக்குக் கொடுத்திருந்தால், அதன் படி தவறாமல் செய்து கொடு. வாக்குக் கொடுக்கும் பொழுது ஆத்திரப்படாதே. கொடுத்த பிறகு வாக்குத் தப்பாதே. இப்படிச் செய்தால் ஜனங்களுக்கு உன்னிடத்தில் நம்பிக்கை உண்டாகும். யாராவது உன்னை ஒன்று செய்து கொடுக்கக் கேட்டால் அது உன்னால் முடியாத விஷயமாயின், அதை அப்பொழுதே தெரிவித்து விடு.

**WOMENS' PAGE**

# பெண்கள் பல புருடரை மணக்கலாகாதா?

## Can women adopt Polyandry?

(முஜீப் - ஜமாலீ)

ஒரு நாள் வழக்கம்போல் இமாம் ஆஜம் அபூ ஹனீபா(ரஹ்) காலை வணக்கத்தை முடித்துக்கொண்டு முஸ்லிம் மக்களுக்கு மதோபதேசம் புரிந்து கொண்டிருக்கையில் மாதர் கூட்டத்திலிருந்து சிலர் கேள்விகள் கேட்டனர்.

**ஒருமாது:** இஸ்லாம் மார்க்கத்தில் பெண்களான எங்களுக்கு என்னவித சுதந்தரமளிக்கப்பட்டிருக்கிறது?

**இமாம்:** ஆண்களுக்கு என்னென்ன உரிமைகள் கொடுக்கப்பட்டிருக்கின்றனவோ அவை யாவும் உங்களுக்குமுண்டு.

**மாது:** அவ்வாருயின் எங்கள்-நிக்காஹ்-திருமண-விஷயத்தில் எங்களுக்களிக்கப்பட்ட உரிமைகளென்ன?

**இமாம்:** ஆண்களைப்போல் இது விஷயத்தில் உங்களுக்கும் பூரண உரிமைகளுண்டு. வயது வந்த ஒவ்வொரு பெண்ணும் தன் மனத்திற்குப் பிடித்த மணாளனைத் தேர்ந்தெடுத்து மணம் புரிந்து கொள்ளலாம். தாலிகட்டிய புருடனை (தக்க காரணத்தோடு) சட்டரீதியாக விவாக ரத்து—குலுவு-செய்து கொள்ளவும் உங்களுக்கு உரிமை அளிக்கப்பட்டிருக்கிறது. உங்களனுமதியின்றி உங்களுக்கு விவாகம் செய்துவைக்கப் பெற்ருேருக்கு உரிமை கிடையாது. தன் மனத்துக்கொவ்வாதவனை மணக்கப் பெற்ருேர் வற்புறுத்துவரேல் காஜியின் முன் முறையிட்டு அம்மணத்தை முறித்தெறிய உங்களுக்குச் சுதந்தரமுண்டு. இவற்றைவிட உங்களுக்கு வேறென்ன உரிமை வேண்டும்? இவை யாவும் இஸ்லாத்திற்கு முன் பெண்பாலார்க்கு அறவே அளிக்கப்படவேயில்லை யென்பதை நீங்கள் ஞாபகத்தில் இறுத்திக் கொள்ளவும்.

**மாது:** எங்களுக்கு அருளப்படாத வேறு சுதந்தரமும் ஆண்களுக் கிருக்கின்றதே?

**இமாம்:** அது என்ன?

**மாது:** அதாவது, ஒவ்வொரு புருடனும் தாமிஷ்டப்படின் ஒன்றுக்கு மேற்பட்ட மனைவிகளை (நான்குவரை) ஏககாலத்தில் அடையலாம். அவ்வுரிமை எங்களுக்கேன் தரப்படவில்லை? நாங்களேன் பல புருடர்களை மணக்கக் கூடாது?

இக்கேள்விக்கு இமாம் ஆஜம் இஸ்லாமிய தத்துவ முறையால் ஒருவாறு விளக்கி வைத்தார். எனினும் அது அவர்களுக்கு திருப்தியுண்டு பண்ணவில்லை. ஆகவே நன்கு ஆராய்ந்து மறுநாள் காலை விடையளிப்பதாகக் கூறிவிட்டார். அதற்கு அவர்களெல்லோரும் இசைந்தனர். மஜ்லிஸ் கலைந்தது.

அன்று முழுவதும் இமாம் ஆஜம் ஒரே சிந்தனையில் ஆழ்ந்திருந்தார். பல பெரிய இஸ்லாமிய சட்ட நூல்களைப் புரட்டிப் பார்த்தார். ஆனால் அவருக்குப் புதுமாதிரியான விடையொன்றும் கிடைக்க வில்லை.

உணவருந்தும் நேரமாகியும் தம் தந்தை வராததைக்கண்ட இமாம் ஆஜமின் திருமகளார், தகப்பனாரைக் காண அவர் அறைக்குச் சென்ருர். அங்கு இமாம் ஆஜம் ஆழ்ந்த யோசனையில் வீற்றிருப்பதைக் குறிப்பாலறிந்த அவ்வம்மையார், தந்தையை யணுகி மிகஅனுதாபத்துடன் விஷயத்தை விசாரித்தார். அதற்கு இமாம் ஆஜம் அன்று காலை "மஜ்லிஸெ வஅஜி"ல் நடந்தவற்றை எடுத்துரைத்து அவர்களுக்குத் தக்க விடையளிக்க வேண்டியிருப்பதால் அது பற்றிச் சிந்திப்பதாகக் கூறினர். "இதற்குத்தானே பதில் சொல்லணும் நாளை சொல்லிவிட்டாலாச்சு, எழுந்து வாருங்கள் பாவா! சாப்பாட்டு நேரமாச்சு" என்று கொஞ்சம் தொனியில் கூறித் தந்தையை உணவறைக்கு அழைத்துச் சென்ருர் அத்திருமகளார். "அவர்கள் நாளைக்கு வந்தால் நேரே என்னிடம் அனுப்பிவிடுங்கள் பாவா! நான் பதில் சொல்லி விடுகிறேன் அவர்களுக்கு" என்ருேர் ஆறுதல் மொழியையும் போட்டு வைத்தார் அவர்.

தம் செல்வக் குமாரியின் வார்த்தையைக் கேட்டு இமாம் ஆஜம் அளப்பரிய ஆனந்தங் கொண்டார். சிற்சில சந்தர்ப்பங்களில் வீட்



மடங்கும் ... ...னையின்போது அவ்வம்மையார் கூறும் அரிய யோசனைகளும், பகுத்தறிவுக்கேற்ற பதில்களும் கேட்டு அவருடைய அறிவுத்திறனை நன்கு அறிந்திருந்த இமாம் ஆஜமுக்கு அத்திரு மகளாரின் வார்த்தை பூர்ண நம்பிக்கையையும், மனோநிம்மதியையு மளித்தது.

மறுநாள் முறைப்படி அப்பெண்மணிகள் இமாம் ஆஜமின் சமுகத்திற்கு விஜயம் செய்தனர். அவர்களைத் தம் திருமகளாரிடம் அனுப்பிவைத்தார் இமாம் ஆஜம்.

முதலில் க்ஷேமலாபங்கள் விசாரித்தபின் தாங்கள் வந்த நோக்கத்தை அப்பெண்கள் எடுத்துரைத்தனர். அதற்குத் திருமகளார், அவர்களை விளித்து "நீங்கள் ஒவ்வொருவரும் ஒரு சிறு கிண்ணத்தில் கொஞ்சம் முலைப்பாலைக் கொண்டுவாருங்கள்" என்று கூறினர். ஆச்சரிய மிகுதியால் அவர்கள் அப்படியே தங்கள் முலைப்பாலை தனித்தனிக் கிண்ணங்களில் சமர்ப்பித்தனர். உடனே திருமகளார் ஒரு பெரிய பாத்திரத்தையெடுத்து வந்து அதில் அச்சிறு கிண்ணங்களிலுள்ள பால்களை யெல்லாம் ஒன்ருய்க் கலந்துவிட்டார். பின்பு அவர்களை நோக்கி "சகோதரிகளே! இப்பொழுது நீங்கள் தத்தம் பாலைத் தனியே பிரித்து எடுத்துக் கொள்ளுங்கள் பார்ப்போம்" என்று கூறினர்.

அவர்களில் ஒருவர் திருமகளாரை நோக்கி "சகோதரியே! ஈதென்ன விளையாட்டு! நாம் கேட்ட கேள்விக்குப் பதில் பெறும் பொருட்டல்லவோ இங்கு வந்தோம்" என்று படபடப்புடன் கேட்டார். அதற்குத் திருமகளார் அமைதியுடன் "இதுவே தான் உங்களுக்குப் பதில். கொஞ்சம் சிந்தித்துப் பார்த்தால் விளங்கும். சகோதரிகளே! அற்பம் ஒன்ருய்க் கலக்கப்பட்ட இந்தப் பாலை நாம் தனியாகப் பிரிக்கவோ, அல்லது குறித்தறியவோ முடியவில்லை! அப்படியிருக்க நாம் ஏககாலத்தில் நான்கு புருடர்களை மணந்து கொண்டோமானல் நமக்குப் பிறக்கும் சேய் யாருக்குரியது? எவர் பெயரால் அக்குழந்தை உலகினரால் அறியப்படுவது? என்பதை யோசித்துப் பாருங்கள். இதற்காகவே சத்திய சன்மார்க்கமான இஸ்லாம், நாம் ஏககாலத்தில் ஒரு புருடனைவிட அதிகம் கொள்ளக்கூடாதென்று சட்டம் விதித்தது" என்ருர்.

இந்த பதிலைக் கேட்ட அப்பெண்மணிகள் அப்படியே ஸ்தம்பித்துப் போயினர். திருமகளாரின் அறிவாற்றலையும், பகுத்தறிவுக்கேற்ற பதில் கூறும் திறமையையும் கண்டு வியந்தனர்.

தம் திருமகளாரின் புகழைக் கேட்டு மெய்மறந்த இமாம் ஆஜம் "அல்ஹம்து லில்லாஹ்" என்று ஆண்டவனை வாழ்த்தலானர்.


## ஷாஜஹான் புக் டெப்போ பிரசுரங்கள்

| | | | | |
|---|---|---|---|---|
| குர்ஆன் மொழிபெயர்ப்பு "அம்மயத்" (30-ஆம் பாகம்) (வியாக்கியானத்துடன்) ... ... | ரூ. | 2 | 0 | 0 |
| ஷை (வியாக்கியானமின்றி) அர்த்தம்மட்டும் ... | ,, | 0 | 12 | 0 |
| ஷை முதல் $3\frac{3}{4}$ ஜுஜு தமிழ் அர்த்தம்மட்டும் ... | ,, | 1 | 8 | 0 |
| இஸ்லாமிய ஞானபோதம் ... ... | ,, | 3 | 0 | 0 |
| இயேசுவின் இரகசியம் (காலிகோ பயிண்டு) ... | ,, | 1 | 8 | 0 |
| மஹான் முஹம்மது நபி (ஸல்) ... ... | ,, | 0 | 8 | 0 |
| அபூபக்கர் ஸித்தீக் (ரலி) ... ... | ,, | 0 | 12 | 0 |
| உமர் (ரலி) ... ... | ,, | 1 | 0 | 0 |
| நாயகத்தின் நற்குணங்கள் ... ... | ,, | 0 | 12 | 0 |
| சுன்னத் வல் ஜமாஅத் ... ... | ,, | 0 | 8 | 0 |
| இஸ்லாம் எப்படிச் சிறந்தது ... ... | ,, | 0 | 10 | 0 |
| ஜியாரத்துல் குபூர் ... ... | ,, | 0 | 12 | 0 |
| தக்தீரும் தலைவிதியும் ... ... | ,, | 0 | 8 | 0 |
| மக்காமதீனு (ஸபர் நாமா) படங்களுடன் ... | ,, | 1 | 0 | 0 |
| வீரத் துருக்கி வல்லரசு (படங்களுடன்) ... ... | ,, | 0 | 4 | 0 |

(வி. பி. வேறு; முன் பணம் அனுப்பவேண்டும்.)

**நூருல் இஸ்லாம் ஆபீஸ்,** 65, பிராட்வே, சென்னை.

# காயிதெ அஃலம் ஜனுப் ஜின்னுஹ் சொற்பெருக்கு

## QUAID - E - ALAM JANAB JINNAHS' ORATORICAL SPEECH

பம்பாய் முஸ்லிம் பெடரேஷன் இயக்க ஆதரவில் 24-1-43 ஆந் தேதி மாலை நடந்த மாபெருங் கூட்டமொன்றில் அகில இந்திய முஸ்லிம் லீக் தலைவர் காயிதெ அஃலம் ஜனுப் ஜின்னுஹ் அவர்கள் நம் நாட்டின் நெருக்கடியைத் தீர்க்கும் பிரச்னை பற்றி முக்கியமானதொரு சொற்பெருக்கு ஆற்றியுள்ளார்கள். அதன் விவரம் வருமாறு :—

இப்போது நம் நாட்டில் ஏற்பட்டிருக்கும் நெருக்கடியைத் தீர்க்கும் பிரச்னை ஜின்னுஹ்வையே பொறுத்ததென்று பலர் கூறுகிறார்கள். ஆனால், உண்மையில் திரு. காந்தியும், காங்கிரஸ் தலைவர்களும் மனப்பூர்வமாக முயற்சி எடுத்துக்கொண்டால் நம் நாட்டின் இப்போதைய நெருக்கடி மிகச் சுலபமாகத் தீர்ந்துவிடும் என்று நான் கூறுகிறேன்.

முஸ்லிம் லீகும், அதன் தலைவர் என்ற ஹோதாவில் நானும் காங்கிரஸ் தலைவர்களைச் சிறையிலிருந்து மீட்க முன்வந்து முயற்சி எடுத்துக் கொள்ள வேண்டுமெனக் கூறப்படுகிறது. இது வெறும் முகஸ்துதியான பேச்சேயாகும்; என்னை உயர்த்திப் பேச முயல்வதேயாகும். ஆனால், நாட்டின் நிலையை நாம் ஆராய்ந்து பார்ப்போம்.

கடந்த ஆகஸ்ட் மாதம் 8-ஆந் தேதி காங்கிரஸ் கமிட்டி நிறைவேற்றிய தீர்மானத்தை எடுத்துக்கொள்ளுங்கள். கடந்த 20 ஆண்டுகளாக இந்தியாவின் விடுதலைக்காகக் காங்கிரஸ் கையாண்ட கொள்கையினைக் கவனியுங்கள். மிகச் சமீபமாக 1942-ல் திரு. காந்தியார், "முஸ்லிம் லீகுடன் அனுபவ சாத்தியமானதோர் ஒப்பந்தம் செய்து கொள்ளப்படாதவரை, சட்ட மறுப்புப் போரானது, லீகுக்கு எதிரான கிளர்ச்சியாக மாறிப் பெருங் குழப்பம் உண்டாகிவிடக் கூடும். எனவே, இவ்வாறு ஒரு புதிய குழப்பம் உண்டாக்கிக் கொள்வதற்கு எந்தக் காங்கிரஸ்காரனும் உடந்தையாக் இருக்க முடியாது" என்று கூறியுள்ளார். மற்றொரு சமயத்தில் திரு. காந்தியார், "ஒரு பெரிய போர் நடைபெற்றுக் கொண்டிருக்கையில், வகுப்புச் சமரஸத்திற்கு வழி காணாமல் பொதுஜனக் கிளர்ச்சியைத் தொடங்குவதானது உள்நாட்டுக் கலகத்திற்கு இடங்கொடுப்பதாக வந்து முடியும். இது தற்கொலைக் கொள்கையைத் தானே வரவழைத்துக் கொள்வதாகவே ஆகும். ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமை ஒப்பந்தம் ஏற்படாமல் நாட்டிற்கு விடுதலை என்பது எக்காலத்திலும் கிட்டாது" என்று கூறியுள்ளார்.

இவ்வாறு கூறிய திரு. காந்தியாரும் காங்கிரசும் திடீரென்று 1942 ஆகஸ்ட் 8-ஆந் தேதி ஏன் வேறு விதக் கொள்கையுடன் கூடியதொரு தீர்மானத்தை நிறைவேற்ற வேண்டும்? இந்தக் கொள்கைப்படி நாட்டு விடுதலைப் பிரச்னைதான் முதலில் கவனிக்கப்பட வேண்டும்; அதன் பிறகே ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமைக்கான ஒப்பந்தம் என்பதுடன், பிரிட்டிஷாருக்கு எதிராக "இந்தியாவை விட்டு வெளியேறுங்கள்" என்ற ஸ்லோகமும் உண்டாக்கப்பட்டதே. இது திடீரென்று தோன்றிய புரட்சிகரமான முழு மாறுதலாக இருப்பதுடன் எதிர்பாராத விதமாக அடிக்கப்பட்டதொரு பெரிய பல்டியாகக் காணப்படவில்லையா? காங்கிரஸ் இத்தகைய கொள்கையை அனுஷ்டிக்கத் தொடங்கியதன்மூலம் பிரிட்டிஷ் ஸர்க்கார் காங்கிரஸின் பொதுஜன சட்டமறுப்பியக்கத்திற்கு எதிரான கொள்கையைக் கையாள வேண்டியது அவசியமாகிவிட்டது. இஃது இயற்கைதானே

காங்கிரஸோ, திரு. காந்தியாரோ அல்லது பிற இந்து சமூகத் தலைவர்களோ முஸ்லிம் லீகுடன் எத்தகைய ஒப்பந்தமும் செய்து கொள்ளாமலே இந்தியாவின் விடுதலையைப் பெற்றுவிடத் தங்களால் முடியுமென்று எண்ணுகின்றார்களா? எனவே, காங்கிரஸ் மேற்கொண்ட கொள்கையானது-திரு காந்தியார் கூறியுள்ளபடி-தற்கொலை செய்து கொள்வதற்குரியதேயாகும். முஸ்லிம்கள் எண்ணிக்கையில் நான்கில் ஒரு பங்கினராகவே இருக்கலாம். ஆனால் இவ்வாறு தலைகளை எண்ணிக் கணக்கிட்டுக்கொண்டு போவதன் மூலம் எப்போதுமே நீங்கள் காலத்தைக் கழித்துவிட முடியாது. இந்தியா எனும் இந்த உபகண்டத்தில் முஸ்லிம்கள் மிகுந்த சக்தி பொருந்திய ஒரு சமூகத்தினராகவே இருக்கிறார்கள். காங்கிரஸ் தலைவர்களின் மனப்போக்கு தெளிவாக அறியக் கிடக்கிறது. முஸ்லிம் இந்தியாவின் ஜீவாதாரமான, அதிமுக்கியமான கோரிக்கைகளையும் நலன்களையும் பலிகொடுத்துத் தூக்கி எறிந்துவிட்டு, தங்கள் கோரிக்கைகளுக்கு அடிபணிந்து சரணாகதி அடைந்து விடுமாறு பிரிட்டிஷ் ஸர்க்காரை வற்புறுத்தத் தங்களுக்குப் போதிய சக்தி இருக்கிறதென்று காங்கிரஸும், திரு. காந்தியாரும் கருதிக் கொண்டிருக்கிறார்கள். முஸ்லிம் லீகை அலட்சியம் செய்து விடுதல் என்பது அர்த்தமற்ற ஒரு விஷயமாகவே இருக்கிறது.



இது சம்பந்தமாக, கான்பூரில் சமீபத்தில் நடைபெற்ற ஹிந்து மகாசபை மகாநாட்டினர் நிறைவேற்றியுள்ள தீர்மானத்தையும் குறிப்பிட வேண்டியிருக்கிறது. மகாசபை என்பது காங்கிரஸின் மற்றோரங்கம்; காங்கிரஸின் எதிர் ஒலி. இதற்கு முதுகெலும்பு இருப்பதாகத் தெரியவில்லை. இந்த மகாசபையினர், "இந்தியாவின் விடுதலையையும் சுதந்தர வாழ்வையும் நாங்கள் பெறப்போகிறோம். நீங்கள் விரும்பினால் உங்களுடன் சேர்ந்தே பெறுவோம். நீங்கள் இம்முயற்சியில் எங்களுடன் ஒத்து வராவிடின் நீங்கள் இல்லாமலே நாங்கள் பெற்றுத் தீர்ப்போம்" என்று தீர்மானம் நிறைவேற்றியிருக்கின்றனர்.

எனவே, மேலே குறிப்பிடப்பட்ட இரு சாராரும் முஸ்லிம் லீகை அலட்சியம் செய்வதுடன் நில்லாமல், ஏதோ விபரீதப் பலன்கள் ஏற்பட்டு விடுமென்ற பயமுறுத்தலைக் கொண்டு பிரிட்டிஷ் ஸர்க்காரை மிரட்டித் தங்கள் விருப்பத்திற்குப் பணியவைக்கும் முயற்சியில் இறங்கியிருக்கின்றனர். ஆனால், இந்நாட்டிலுள்ள 10 கோடி முஸ்லிம்களும் ஒரு ஹிந்து ராஜ்யத்தின் தயவில் வாழ்ந்திருக்க ஒருநாளும் விரும்ப மாட்டார்கள் என்பதுடன் சிறிதும் ஐயமின்றி அவர்கள் புரட்சி செய்வார்கள் என்பதை நான் உறுதியாகக் கூறுகிறேன்.

நெருக்கடி தீர்வதற்கு எதிராக, இந்து மகாசபை செய்திருக்கும் தீர்மானமானது இந்தியாவிலுள்ள பெரிய கட்சிகளுக்கிடையே சமரஸம் ஏற்படாவிடின் (இந்தியாவின் விடுதலை விஷயத்தில்) "எங்களால் ஒன்றுமே செய்ய முடியாது" என்னும் பதில் சொல்லமுடியாத பழைய வாதத்தையே மீண்டும் பயன்படுத்த பிரிட்டிஷ் இரட்டை ஆட்சியாளர்க்கு ஒரு பிடி கொடுத்தாகவே போய் முடியும்.

காங்கிரஸ் தன் கோரிக்கையில் வெற்றி பெற்று விட்டதென்றே வைத்துக்கொள்வோம். அல்லது பிரிட்டிஷ் ஸர்க்கார் இந்தியாவினின்று வெளியேறி விட்டதாகவே எண்ணிக்கொள்வோம். காங்கிரஸின் கொள்கைப்படி அது எண்ணுகிறவாறு இந்தியா விடுதலை பெற்றுவிட்டதாகவே நினைத்துக் கொள்வோம். இங்ஙனம் விடுதலையடைந்து விட்ட இந்த உபகண்டத்தின் விடுதலை பறிபட்டுப் போகாமல் பாதுகாத்துக் கொள்ளக் காங்கிரஸால் முடியுமா? முஸ்லிம் இந்தியா ஒரு ஹிந்து ராஜ்யத்திற்குப் பணியப் போவதில்லை என்பது ஏற்கெனவே நன்கு தெரிந்த வெளிப்படையான விஷயம். இந்நிலையில் அராஜகமும் கலகமும் குழப்பமுமே இதன் பலனாக இருக்கும்.

பிரிட்டிஷார் இந்நாட்டை விட்டுப் போய்விட்ட பிறகு, இந்துக்களும் முஸ்லிம்களும் ஒரு சமரஸ ஒப்பந்தம் செய்துகொள்ளுதல் கூடும் அல்லது அப்படி ஒப்பந்தம் ஏற்படாமற் போனாலும் போகும் என்று திரு. காந்தியார் கூறியுள்ளார். அதனுடன், உள்நாட்டுப் போரும் இரத்தம் சிந்துதலும் கூட ஏற்படுதல் கூடும் என்று திரு. காந்தியாரே கூறியுள்ளார். எனவே, காங்கிரஸின் கருத்தோ அல்லது இந்து மகாசபையின் கருத்தோ-இன்னது தான் என்பதைச் சரிவர அறியவோ, அறிந்து அதனைப் பின்பற்றவோ முடியாத காரியமாகவே இருக்கிறது. ஆனால் இங்குள்ள ஏராளமான பத்திரிகைகள், ஏதேனும் ஒருவித சமரஸ ஒப்பந்தம் ஏற்பட்டே தீரவேண்டும் என்று ஏதேதோ புதுப்புது யோசனைகளையும் கட்டுரைகளையும் எழுதித் தள்ளிக்கொண்டேயிருக்கின்றன. இவை தவிர வேறு பல பகுதிகளிலிருந்துகூட பலவிதமான ஆலோசனைகளும் திட்டங்களும் வெளிவந்து கொண்டேயிருக்கின்றன. பிரிட்டிஷாரை இந்தியாவை விட்டு வெளியேற்றும் கொள்கையில் இவர்கள் நம்பிக்கை வைத்தில்லை என்பதை இந்த ஆலோசனைகள் நன்கு தெளிவாக எடுத்துக் காட்டி விடுகின்றன. இவர்கள் கோருவதெல்லாம் என்ன தெரியுமா? சமரஸ ஒப்பந்தந்தான். சமரச ஒப்பந்தம் என்றால் முஸ்லிம்களுடன் செய்து கொள்ளப்பட வேண்டும் என்பதல்ல. பிரிட்டிஷ் ஸர்க்காருடன் சமரஸ ஒப்பந்தம் செய்துகொள்ள வேண்டும் என்பதே இவர்களுடைய உட்கருத்தாக இருக்கிறது. பிரிட்டிஷார் இந்த நாட்டில் இருந்தே தீரவேண்டுமென்று இவர்கள் கோருகின்றனர். இது அவர்களுடைய அரசியல் கொள்கை அல்லவெனினும் அவர்களுடைய உள்ளக்கிடக்கை இதுதான். உடனே சுதந்திரம் ஏற்பட்டு விடவேண்டுமென்பது அவர்களுடைய விருப்பமன்று. அல்லது பிரிட்டிஷார் உடனே நாட்டை விட்டு வெளியேறி விடவேண்டும் என்பதும் அவர்களுடைய விருப்பமன்று. ஆனால், ஏதாவது ஒருவிதமான ஸர்க்காரை ஏற்படுத்

திக்கொண்டு, பிரிட்டிஷாரின் ஆதிக்கத்தின் கீழிருந்து கொண்டே முஸ்லிம்களைத் தங்கள் ஆட்சிக்கு உட்படுத்திக் கொள்ள வசதி ஏற்படுத்திக்கொண்டு, சிறுகச் சிறுக, முஸ்லிம்களை நசுக்கித் தொலைத்துவிட வேண்டுமென்பதே இவர்களுடைய விருப்பமாக இருக்கிறது.

இந்தக் கனவெல்லாம் வெறும் கானல் நீரை ஒத்ததுதான். இந்த உபகண்டத்தின் ஸர்க்கார் தலைமைப் பதவியில் திரு காந்தியையும், திரு. நெஹ்ருவையும் அமர்த்தி வைத்து, பிரிட்டிஷ் கத்திகளின் முனையில் முஸ்லிம்களையும் பிறரையும் இவர்கள் ஆளுகைக்கு உட்படுமாறு செய்ய பிரிட்டிஷ் ஸர்க்கார் முனையுமா? என்று நான் கேட்கிறேன். காங்கிரஸும், இந்து சமூகத் தலைவர்களும், இந்நாட்டின் இருபெரும் சமூகங்களாகிய இந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் விடுதலையும் சுதந்தர வாழ்வும் வேண்டுமென்று உண்மையிலேயே விரும்புவார்களாயின், பாக்கிஸ்தான் திட்டத்தை மனமார ஏற்றுக் கொள்வதைத் தவிர வேறு வழி ஒன்றும் இல்லை. இப்படியில்லாமல் காங்கிரஸானது அகண்ட ஹிந்துஸ்தானத்தைப் பற்றியும் ஐக்கிய இந்தியாவைப்பற்றியும் பேசிக் கொண்டிருப்பதையே இன்னும் தொடர்ந்து கைக்கொள்ளுமாயின் இதன் பலன் எல்லோருக்கும் அடிமைத்தனம் இன்னும் நீடிக்கும் என்பதைத் தவிர வேறில்லை. 'அகண்ட ஹிந்துஸ்தான்' என்பதற்கு அர்த்தமென்னவென்றால் கான்பூரில் ஹிந்து மகாசபை நிறைவேற்றிய தீர்மானத்தில் தெளிவாக விளக்கப் பட்டிருக்கிறவாறு, இந்துக்களின் பூரண ஆக்ரமிப்பு அதாவது இந்நாடு முழுவதும் இந்துக்களின் ஆட்சிக்கு உட்பட்டிருக்க வேண்டும் என்பதேயாகும்.

இந்தியாவின் நெருக்கடியைத் தீர்த்து வைக்க முஸ்லிம் லீக் முன்வந்து முயற்சி எடுத்துக் கொள்ளவேண்டும் என்று கூறப்படும் யோசனையை இங்கு மீண்டும் எடுத்துக் காட்டுகிறேன். இது சம்பந்தமாக, பிரிட்டிஷாரின் நடவடிக்கை இந்நிலையில் எவ்வாறிருக்கிறதென்பதை நாம் கவனிக்க வேண்டும். (இங்கு, இந்தியா மந்திரி கர்னல் அமெரி சமீபத்தில் ஆற்றிய சொற்பொழிவிலிருந்து சில பகுதிகளை வாசித்துக் காட்டினார்.) திரு. அமெரி சரித்திர சம்பந்தமான ஒரு விஷயத்தைக் கண்டு பிடித்திருக்கிறார். இந்த யுத்தம் முடிந்த பிறகு இந்தியாவைப் புனருத்தாரணம் செய்வதற்குக் கர்னல் அமெரி, அக்பர் சர்க்காரைப் போன்றதொரு ஸர்க்காரைப் பற்றி இப்போது படித்து ஆராய்ச்சி செய்து கொண்டிருக்கிறார். இந்தியாவிலுள்ள பிரிட்டிஷ் ஸர்க்கார்கூட அக்பர் ஸர்க்காரைப் போலவே அமைக்கப்பட்டிருக்கிறது. அக்பர் இந்துக்களையும் முன்லிம்களையும் தமக்கு மந்திரிகளாக அமர்த்திக் கொண்டிருந்தார். தாம் இந்நாட்டில் இரு சமூகத்தினரையும் சேர்த்து ஆட்சி புரிய வேண்டும் என்பதை அக்பர் உணர்ந்திருந்தார். அவர் நடத்தியது தம் சொந்த முறையில் அமைத்துக் கொண்ட சுய ஆட்சியாகும். அவர் சந்தர்ப்பத்திற்கேற்றபடி ஒரு சமயத்தில் ஹிந்துக்களைத் தட்டிக்கொடுத்துக் கொண்டும், மற்றொரு சயயத்தில் முஸ்லிம்களைத் தட்டிக் கொடுத்துக் கொண்டும் தம் ஆட்சியை நடத்தினார். நாட்டு அரசியல் நிர்வாகத்திற்கும், இராணுவ நிர்வாகத்திற்கும் என அவர் பல்வேறு சமூகத்தவர்களிலிருந்து தமக்கு வேண்டிய மந்திரிகளைத் தேர்ந்தெடுத்து அமைத்துக்கொண்டார். அவருடைய ஆட்சியை ஹிந்துக்கள் அப்படியே ஏற்றுக் கொண்டு திருப்தி அடைந்து விட்டவர்களாக இல்லை. ஹிந்துக்களால் தொல்லை ஏற்பட்ட காலத்தில் முஸ்லிம் மந்திரிகளைக் கொண்டும், முஸ்லிம்களால் தொல்லை ஏற்பட்ட காலத்தில் ஹிந்து மந்திரிகளைக் கொண்டும் அவர் நிலைமையைச் சமாளித்து ஆட்சி நடத்தினார். அத்தகைய ஸர்க்கார் தான் இந்த நாட்டில் இப்போது நிலை நிறுத்தப்பட வேண்டுமென்று கருதப்படுகிறது. ஐக்கிய இந்தியா என்றால், பொது ஜனங்களைப் பொறுத்தமட்டில் அவர்களுக்கு எத்தகைய உரிமையும் கிடையாது. ஆட்சி புரிபவர்கள் சூழ்ச்சி தந்திரம் முதலியவைகளால் ஆட்சி நடத்திக்கொண்டு போவார்கள். இத்தகைய ஆட்சிமுறையைத் தான் பிரிட்டிஷ் ஸர்க்கார் இந்தியாவில் அனுஷ்டித்து வருகிறது. இன்னும் இதனையே தொடர்ந்து அனுஷ்டிக்கவும் விரும்புகிறது. இப்போதைய வைஸிராயின் நிர்வாக சபையும் அக்பருடைய நிர்வாக சபையைப்போன்ற மாதிரியில்தான் அமைக்கப்பட்டிருக்கிறது. வைஸிராய் தம் காரியங்களை நடத்திக் கொண்டு போவதற்காக, முஸ்லிம்கள், ஹிந்துக்கள், பார்ஸிகள், சீக்கியர்கள் ஆகியோரை யெல்லாம் தம் நிர்வாக சபையில் நியமனம் செய்து வைத்திருக்கிறார்.

கல்கத்தாவில் வர்த்தகர் சபையில் வைஸிராய் பேசியிருக்கிறார். கர்னல் அமெரி இந்திய சரித்திர ஆராய்ச்சியில் இறங்கி, ஐக்கிய இந்தியாவைப்பற்றிக் கூற முன்வந்து விட்டார். வைஸிராய் லின்லித்கோ பிரபுவோ



நம் நாட்டில் ஏழு ஆண்டுகள் இருந்த பிறகு, இந்தியா பூகோள அமைப்பின்படி ஒரே நாடாகும் என்று திடீரென்று கண்டுபிடித்துக் கூற முன் வந்துவிட்டார். அறிவாளியாகிய எந்த மனிதனும் இச்செயல்களை என்னவென்று மதிப்பான்? ஆகவே, கான்பூரில் ஹிந்து மகாசபை நிறைவேற்றி யிருக்கும் அகண்ட ஹிந்துஸ்தான் தீர்மானமானது பிரிட்டிஷ் இரட்டை ஆட்சியாளர்க்குப் புது வருடப் பரிசு ஒன்றைக் கொடுத்திருக்கிறது என்றே கூறவேண்டும்.

இத்தகைய சந்தர்ப்பங்களில், நெருக்கடியைத் தீர்த்துவைக்க என்னால் எங்ஙனம் முடியும் என்று நான் கேட்கிறேன். ஆகஸ்ட் மாதம் 8-ஆந் தேதியிலிருந்து இதுவரை காங்கிரஸ் தன் மனப்பான்மையை மாற்றிக் கொண்டிருப்பதாக எவ்வித அறிகுறியும் காணப்படவில்லை. பல காங்கிரஸ் தலைவர்கள் சிறையிலிருக்கின்றனரெனினும், எல்லாக் காங்கிரஸ்காரர்களும் சிறைச்சாலைக்குள் அடைபட்டில்லை. ஹிந்து பத்திரிகைகள் சிறைச்சாலைக்குள் இல்லை. இவ்வளவிருந்தும் காங்கிரஸ் தன் கொள்கையில் எத்தகைய மாறுதலும் கொண்டிருப்பதாகத் தெரியவில்லை. ஆகஸ்ட் மாதம் 8-ஆந்தேதி காங்கிரஸ் நிறைவேற்றிய தீர்மானத்தை ஹிந்து மகாசபை மிகுந்த ஆக்ரமிப்பு முறையில் ஆதரித்துள்ளது. இந்த நிலையில் அன்று எத்தகைய தீர்மானம் செய்ததோ அதனை அப்படியே காங்கிரஸ் இறுகப் பிடித்துக் கொண்டிருக்கிறதே தவிர, வேறு எத்தகைய புதிய திட்டமும் காணப்படவில்லை. இங்ஙனமிருக்கையில் இப்போதைய நெருக்கடியைத் தீர்ப்பதற்குத் தகுந்த திட்டம் வகுக்க ஹிந்துக்களுள் எவரும் இல்லையா? முஸ்லிம் இந்தியாவுடனும் முஸ்லிம் லீகுடனும் ஒரு சமரஸத்திற்கு வருவதற்காக வேண்டிப் பேசுவதற்கு விருப்பங் காட்டவோ, மன மாற்றம் கொண்டிருப்பதாக எண்பிக்கவோ, கொள்கையை மாற்றிக் கொண்டதாக நிரூபிக்கவோ தகுந்த ஆதாரமும் அதிகாரமும் உடைய வகையில் உறுதிமொழி அளிக்க எவரேனும் முன்வரத் தயாரா யிருக்கின்றனரா என்று நான் கேட்கிறேன்.

முழு நிலைமையையும் நீங்கள் ஆராய்ந்து பாருங்கள். இப்போதைய நாட்டு நெருக்கடியைத் தீர்ப்பதற்குரிய வழி திரு. காந்தியிடமும், காங்கிரஸிடமுமே இருக்கக் காண்பீர்கள். ஆனால் அவர்கள் உண்மையாகச் சற்றும் கபடமற்ற முறையில் மனமாறுதல் அடைந்தே தீரவேண்டும். இப்படி யில்லாமல் அந்தப் பொறுப்பைத் தூக்கி என்மீது சுமத்துவது என்னை முகஸ்துதி செய்வதையே ஒக்கும். நான் அவர்களைச் சிறையில் அடைக்கும் அதிகாரம் பெற்றிருக்கவில்லை. அப்படியிருக்கச் சிறைச் சாலைக் கதவுகளைத் திறந்துவிடும் அதிகாரம் மட்டும் எனக்கு எங்ஙனம் ஏற்பட்டுவிடும்?

பாக்கிஸ்தான் கிடைத்தே தீரவேண்டுமென்று முஸ்லிம் லீக் விரும்புகிறது. முஸ்லிம் மாணவர்கள் இதற்காக என்ன செய்ய வேண்டும்? தங்கள் படிப்பைப் பலிகொடுத்துவிடக் கூடாது. கல்வி மிகமிக இன்றியமையாததாகும். நன்கு படித்தால்தான் முஸ்லிம்களுக்கிடையே விடுமுறை காலங்களில் மாணவர்கள் சமூகத் தொண்டாற்ற முடியும். பள்ளிக்கூடப் படிப்புடன், முஸ்லிம் மாணவர்கள் இந்தியா, வெளிநாடு ஆகியவற்றின் நிலைமைகளையும் நன்கறியவேண்டும்.

காயிதெ அஃலம் ஜனாப் ஜின்னாஹ் அவர்கள் இவ்வாறு சொற்பெருக்காற்றி முடித்த பின்பு, பம்பாய் ஜில்லா முஸ்லிம் மாணவர் சங்கத்தினர் 1500 ரூபாய் கொண்ட பணமுடிப்பொன்றை அவருக்கு அளித்தனர். இதைப் பெற்றுக்கொண்ட பின்னர் ஜனாப் ஜின்னாஹ் பின்வரும் பதில் அளித்தார் :—

பணத்தைப் பிரதானமாகக் கருதிவிடக் கூடாது. முஸ்லிம் லீக் ஆற்றியுள்ள தொண்டைப் பாராட்டி ஆதரிக்கவேண்டும். நீங்கள் ஆதரிக்கிறீர்கள் என்பதைத் தெளிவாக எடுத்துக் காட்டவேண்டும். அதுதான் முக்கியமாகும்.

முஸ்லிம் லீகின் தேவை நாளுக்கு நாள் வளர்ந்து கொண்டே போகிறது. லீக் நிர்வாகத்திற் கேற்படும் பணப்பொறுப்பைத் தானே தனியாக ஏற்றுக் கொள்ளக்கூடிய ஒரு முஸ்லிம் பிரபு இந்நாட்டு முஸ்லிம்களிடைக் காணப்படவில்லை. கடந்த மார்ச் மாதம் 10 லக்ஷம் ரூபாய் தேவைப்படுகிறதென்று நான் ஒரு விண்ணப்பம் விடுத்திருந்தேன். இதுவரை சுமார் 4,25,000 ரூபாய்க்குச் சிறிது அதிகமாகச் சேர்ந்திருக்கிறது. ஆனால் ஒழுங்காக ஒவ்வொருவரையும் நேரிற் சென்று கேட்டிருந்தால் பலர் ஏராளமான தொகைகளை நன்கொடையாகக் கொடுத்திருப்பார்கள் என்பதையும் மிக விரைவில் 10 லக்ஷம் ரூபாய் சேர்ந்து விட்டிருக்கும் என்பதையும் நான் அறிவேன். ஆனால் இதுவரை, இந்த நிதி திரட்டுவதற்காகக் கட்டுப்பாடான ஒழுங்கான முயற்சி எதுவும் எடுத்துக் கொள்ளப்படவில்லை. இதுவரை வந்த பணமனைத்தும் நேரடியாக எனக்கே அனுப்பி வைக்கப்பட்டதாகும்.

# HADIS ஹதீஸ்

## MISHKAT - UL - MASABIH மிஷ்காத்துல் மஸாபீஹ

(மதுரை ஆலீஜனுப் M. K. M. K. மரைக்காயர் மொழி பெயர்ப்பது)

### அத்தியாயம் 1

பிரிவு 1

**எண்ணம் (நிய்யத்)**

(முன் தொடர்)

8. "முஸ்லிம்கள் இருவர் தமது வாளா
யுதங்கொண்டு (ஒருவரை மற்றொருவர்) தாக்
குங்கால், கொன்றவரும் கொல்லப்பட்ட
வரும் நரகஞ் சேர்கின்றனர்" என்று அல்
லா(ஹ்)வின் திருத்தூதர்(ஸல்) கூறியருளி
னார்கள். "அல்லா(ஹ்)வின் திருத்தூதரே!
இது (நரகஞ் சேர்தல்) கொன்றவருக்கு
(ப்பொருந்துவதாகும்); கொல்லப்பட்டவர்
விஷயம் எப்படி?" என்று (தோழர்கள்)
கேட்டார்கள். "(கொல்லப்பட்டவரும் நரக
வாதியாவது ஏனெனில்), நிச்சயமாக அவர்
தமது தோழரைக் கொல்ல ஆவலுடையவ
ராய் இருந்தார்" என்று (நபி பிரான் ஸல்)
விடையிறுத்தார்கள்."

அறிவித்தவர்: **அபூபக்ரு.**

**இருவரும் ஒப்பியது.**

9. "ஒரு சீதனத்தின் பேரில் ஒரு
பெண்ணை மணம் புரிந்து, அதனைச்
செலுத்த எண்ணங் கொள்ளாத ஒருவர் விப
சாரஞ் செய்தவராவார்; திரும்பச் செலுத்தும்
எண்ணங் கொள்ளாமற் கடன் வாங்கும்
ஒருவர் திருடராவார்."

அறிவித்தவர்: **அபூ ஹுறைரு. இப்னுமாஜா.**

---

(209-ம் பக்கத்தொடர்)

எனவே விரைவில், தேவைப்படும் அளவு
பணம் சேர்ந்து விடும் என்று நான் நம்புகி
றேன். மாணவர்கள் உள்நாட்டு நிலைமை
களையெல்லாம் கவனிக்க வேண்டும். வெறும்
புத்தகப் படிப்பால் மட்டும் பயனில்லை. உல
கத்தின் மற்றோரிடத்தில் நடைபெற்றிருக்
கும் சம்பவத்தினின்று இந்தியாவைத் தனிப்
படுத்தி வைத்துவிட முடியாது. முஸ்லிம்
லீகின் கொள்கையையும் திட்டத்தையும்
மாணவர்கள் ஆழ்ந்து பரிசீலனை செய்து
பார்த்து லீகின் இலக்ஷியத்தையும் அதன்
அவசியத்தையும் உணர்ந்து லீகின் மிஷனரி
களாக ஆகி அதன் கொள்கைகளை மக்க
ளிடைப் பிரசாரம் செய்து புகுத்த முன்வர
வேண்டுமென்று கோரிக் கொள்கிறேன்.

### அத்தியர்யம் 1

பிரிவு 2

**விசுவாசம் (ஈமான்)**

குறிப்புரை **7,** (a) **விசுவாசம் இஸ்லாத்
தின் மூலாதாரக் கோட்பாடுகளுட் சிறந்ததா
கும்.** விசுவாசமானது, சித்தாந்தங்களைப்
போலவும் நியாயாதாரங்களைப் போலவும்
செயல்களுக்கு அஸ்திவாரமாய்
அமைந்துள்ளது. சூரியனைப் போலும் சந்தி
ரனைப் போலும் பிரத்தியட்ச உண்மைகளான
சில பொருட்கள் உள்ளன என்னும் விசுவா
சத்தின் மீது இஸ்லாம் மார்க்கம் நிறுவப்
பட்டிருக்கிறது. சில பிரதமப் பிரமாணங்
களை ஒப்புக் கொள்ளாவிடின், கணித சாஸ்
திரம், ரசாயன சாஸ்திரம், க்ஷேத்திர கணி
தம், பிராணி தத்துவ சாஸ்திரம் முதலியன
எக்கலையையும் எவ்வாறு நிலை நாட்டுதல் இய
லாதோ, அவ்வாறே, நம்பிக்கையின்றி எம்ம
தக் கோட்பாடும் நிலை நிற்க முடியாது.
எல்லா உலகங்களிலுமுள்ள படைப்பினங்
களை உண்டாக்கிய சிருஷ்டி கர்த்தாவாகிய
அல்லா(ஹ்) ஒருவன் உளன் என்றும், அவ்வி
றைவன் துஷ்ட நிக்கிரக சிஷ்டபரிபாலனம்
செய்கிறான் என்றும் மக்கள் நம்புதல் இல்லை
யேல், எந்த மதமும் தன்னைப் பின்பற்று
வோருக்கிடையே நல்லொழுக்கத்தை வளர்த்
தல் இயலாது. சில சமயங்களில், மானிடரு
டைய யூகத்தாலும் காட்சியாலும் இவ்வுல
கில் அறியக்கூடியவைகளும் காணக்கூடிய
வைகளுமான பொருட்களின் மீது விசுவா
சங் கொள்ளுதல், பெரும்பாலும் அநாவசிய
மாகவும் மிகையாகவும் இருக்கிற தென்பதில்
ஐயமில்லை. ஆனால் ஒரு வரம்புக் குட்பட்ட
தான மானிட அறிவுக்கு அப்பாற்பட்ட விஷ
யங்களின் மீது விசுவாசங் கொள்ளுதல் அதி
முக்கியமாய் வேண்டப் படுவதாயிருக்கிறது.
(குர். 6: 104). நாம் அறியாதவைகளும் கன
விலேனும் காணாதவைகளுமான அநேக வஸ்
துக்கள் பூவுலகிலும் வானுலகிலும் உள்ளன.
விஞ்ஞானக் கலா வல்லுநர்களாலும் இது
காறும் அறியப்படாத மர்மச் சிருஷ்டிப்
பொருட்களான சூரியனையும் சந்திரனையும்,
பிரகாசம் மிக்க எண்ணிறந்த உடுக்குலங்
களையும் நாம் நாடோறும் காண்பது உண்மை
யல்லவா? இங்ஙனமிருக்க, சாமானிய மக்களா



கிய நாம், நமது அற்ப அறிவு கொண்டு எல்
லாவற்றையும் உணர்வது எவ்வாறு முடியும்?
ஒன்றுமில்லாச் சூனியத்திலிருந்து நாம் ஒரு
பொருளாகச் சிருஷ்டிக்கப் பட்டிருக்கின்
றோம் அல்லோமா? ஒரு பொருளாயிருக்கிற
நாம் ஒன்றுமில்லாச் சூனியமாய் மறைந்து
விட மாட்டோமா? சூனியமாயிருந்த வஸ்
துக்கள் தம்மைச் சில பொருட்களாக அறி
யப் படும்படி தோற்றுவித்த சிருஷ்டிகர்த்தா
வின் உண்மையை மறுத்தல் எங்ஙனம்?
சென்ற காலம், நிகழ்காலம், எதிர்காலம் ஆகி
யவைகளைப் பற்றி அற்ப திருஷ்டியுடையவ
னும், ஓர் எல்லைக் குட்பட்ட மண்டலத்தில்
நிற்பவனுமாகிய மானிடன், தெய்வத் திரு
வாக்கியங்களை நம்பாதிருத்தல் எவ்வாறு?

(b) **ஈமான் என்பது யாது?** இஸ்லாமியப்
பரிபாஷையில், விசுவாசம் என்பது, இருத
யத்தால் மெய்ப்பித்து, நாவினால் வெளியிடுத
லாகும்; ஏனெனில், ஒருவனுடைய கருத்துக்
களை ஏனையோர்பாற் சேர்ப்பிக்கும் முக்கிய
மான வாகனமாகிய நாவோடு மனம் பொருந்
தியிருத்தல் அவசியமாகும். ஆதலால் விசுவா
சியான ஒரு மனிதன், பிரம்ம சமாஜிகளே
போல், விசுவாசக் கோட்பாட்டை நெஞ்சகத்
துக்கொண்டு வாளா விருத்தலாகாது; ஆனால்
மனமானது, தான் நினைப்பதை வெளியுலகத்
திற்குத் துரிதமாய் அனுப்புதற்காகவும் வேறு
நோக்கங்களுக்கர்கவும் மானிட தேகத்தில்
இணைக்கப்பட்டுள்ள விலை மதிக்க வொண்
ணாத இயந்திரமாகிய நாவின் வாயிலாகச்,
செயல்களோடும் வெளிப்படையான அறி
குறிகளோடும் இசைந்தொழுக வேண்டும்.
ஈமான் வேராகவும் செயல் கிளையாகவும்
இருக்கிறது. வேராகிய விசுவாசம் எத்துணை
உறுதியாய் ஆழப் பதிந்திருக்கிறதோ அத்
துணை அதிகமாய் நற்செயல்கள் தோன்றியெ
ழுவனவாய் இருக்கின்றன. வேர் தறிபட்டு
விடுமாயின், கிளைகள் ஜீவித்துச் செழித்து
வளர்தல் இயலாது. இவ்வாறே மத சம்பந்த
மான சில சித்தாந்தப் பிரமாணங்களின் மீது
விசுவாசங் கொள்ளாவிடின், செயல் உதித்
தெழுதற்கு இடமில்லை.

(c) **நமது இகலோகக் காரியங்கள் நம்பிக்
கையின் தொடர்ச்சியே.** விசுவாசமானது,
இவ்வுலக இயற்கையான நிர்விகற்பத்
தொழின் முறையிலிருந்து நாம் பெறக்கூடி
யதாயிருக்கிறது. மாமரங்கள் ஓர் ஆண்டின்
குறிப்பிட்ட பருவத்தில் ஏகோபித்துக்
காய்த்துப் பலன் அளிக்கக்கூடும் என்று
நாம் நம்பிக் காத்திருக்கிறோம்; கழனியை
உழுது பயிரிட்டபின்னர், விதைத்த பயிர்
வளர்ந்து தானியம் தரும் என்று நம்புகி
றோம்; நமது மக்களுக்கு நாம் அளிக்கும்
கல்விப் பயிற்சியால் அவர்கள் பயன் அடை
வார்கள் என்று கருதுகிறோம். எனவே,
இயற்கைத் தொழின் முறையிலிருந்து, இல்
லாத ஒரு பொருள் உண்டென்று நாம் நம்பி
யிருக்கும் ஒரு காலம் இருந்து வருகிறது.
இங்ஙனமே நமது விழிகளுக்குத் தோன்றாச்
சத்தியங்களாகிய அல்லா(ஹ்)வின் மீதும்,
மறுமைத் தீர்ப்புநாளின் மீதும், இவை
போன்ற சமயக் கோட்பாடுகளின் மீதும்
விசுவாசங்கொள்ளுதல், இவ்வுலக வாழ்க்கை
யின் நமது செயன்முறைக்கு இன்றியமை
யாததாகவும் முக்கியமான தூண்டுகோலாக
வும் இருக்கிறது. எதிர்காலத்தில் அறுவடை
யாகித் தனக்குத் தானியங் கிடைக்கத் துணை
புரியும் என்னும் நம்பிக்கையில்லாவிடத்து,
ஒருவன் நிலத்தை உழுது பயிரிடுதல் எங்
ஙனம்? இகலோகமானது பரலோகத்திற்
பலன் அடைவதற்கு வித்து விதைக்கும்
விளைநிலமாயிருக்கிறது; முஸ்லிம்கள் யாவ
ரும் இவ்விசுவாசங்கொண்டே செயலாற்ற
வேண்டும். இஸ்லாமிய விசுவாசம் எழு


**மு. சா. முஹம்மது இஸ்மாயீல் அன் கோ.**

வெள்ளிக் கொலுசு தினுசுக
ளும், சுதேசிக்காசுகளும், சிலோ
ன் ரெத்தினங்களும், எக்ஸ்ட்ரு
பர்மா கமலங்களும், பலவித
நகைகளும், பொன், வெள்ளி
யில் தயார்செய்து விற்கப்படும்.
வி. பி. ஆர்டர்களை உடனே
கவனிக்கப்படும். ஆஸ்ட்ரியா
ஜெர்மன் வெள்ளிச் சாமான்களும் ஆர்டருக்குச் செய்து கொடுக்கப்படும்.



21, நயினியப்ப நாய்க்கன் தெரு, பி. டி. மதராஸ்.

பத்துமூன்றே சொச்சம் கிளைகளுடைய ஒரு விருட்சம் போன்றது. "ஒரு நல்வார்த்தையா(கிய நற்செய்கையா)னது; ஆழ வேரூன்றியதும் வானளாவிய கிளைகளுடையதுமான ஒரு மரம்போன்றதென எவ்வாறு அல்லாஹ் உவமித்துரைக்கிறான் என்று நீவிர் சிந்திக்கவில்லையா?" (குர். 14 : 24.)

(d) **இறைவனுடைய சர்வஞ்ஞத்துவத்தின் மீது விசுவாசங் கொள்ளுதல் அவசியமாகும்.** இப்பிரபஞ்ச சிருஷ்டி ஒவ்வொன்றினிடத்தும் ஓரளவு இந்திரிய ஞானமும் சிந்தனை சக்தியும் அமைந்திருக்கிறது. தாழ்ந்த பிராணிகளான மிருகங்களுக்குள்ள இத்தத்துவம் இயற்கையுணர்வென்றும், மானிடர் போன்ற உயர்ந்த சிருஷ்டிகள்பாற் காணப்படும் இத்தத்துவம் அறிவென்றும் அழைக்கப்படுகிறது. எனவே, ஊர்வன, நடப்பன, பறப்பனவாதி எண்ணிறந்த உம்மத்துக்கள் என்னப்படும் ஜீவவர்க்கங்கள் இத்தரணியிற் காணப்படுகின்றன; ஆண்டவனது திருஷ்டியில் மானிடன் இவற்றுள் ஓர் இனத்தைச் சார்ந்தவனேயாவான். "அன்றியும் பூமியின் மீது நடக்கும் ஒவ்வொரு பிராணியும், தனது இரு சிறகுகளாற் பறக்கிற ஒவ்வொரு பட்சியும் நுங்களைப்போன்ற ஓர் இனத்தைச் சார்ந்தவைகளாகவே இருக்கின்றன" என்று குர்ஆன் (6 : 38) கூறுகிறது. இவ்வுலகிலுள்ள பிராணிவர்க்கத்திற் கிடையே, மனிதன் எல்லாவற்றினுஞ் சிறந்த அறிவு படைத்தவனாயிருக்கிறான். ஒரு பசுவானது தான் மனிதனைப் பார்க்கிலும் உயர்ந்த அறிவுள்ள பிராணியென்று கருதினால், அக்கருத்தை நீங்கள் எவ்வாறு மதிப்பீர்கள்? அப்பசுவை எள்ளி நகையாடுவீர்கள் என்பது திண்ணம். ஓர் எறும்பானது தன்னைக் காட்டினும் பேருடம்புடைய பிராணி பிறிதில்லை என்று நினைத்தால், நீங்கள் அதனை எவ்வாறு ஒப்புக்கொள்வீர்கள்? மானிடர் ஏனைப் படைப்பினங்கள் எல்லாவற்றினும் சிறந்த ஞானமும் உயர்ந்த அறிவும் படைத்தவர்களாதலின், மேற்கூறியவாறு கருதும் தாழ்ந்த பிராணிகள் முற்றிலும் தவறான கருத்துடையன என்பதில் எட்டுணையும் ஐயமில்லை. தமக்கு அளிக்கப்பட்டுள்ள அற்ப அறிவின் மண்டலத்திற் குட்பட்ட இப்பிராணிகள், தமது சுபாவத்திற்கேற்ற கருத்துடையனவாய்க் காணப்படுகின்றன. இவ்விதியானது படிப்படியாய் உயர்ந்த சம்பூரண ஞானியாகிய இறைவனிடத்துச் சென்று முடிகிறது. "நுங்களுக்கு அளிக்கப்பட்டுள்ள அறிவு அற்பமானதேயன்றி வேறில்லை" என்று குர்ஆன் (17 : 85) கூறுகிறது. எனவே, ஒரு தாழ்ந்த பிராணி தன்னினும் உயர்ந்த பிராணிகளின் கூற்றை நம்புவது அவசியமாயிருக்கிறது. மானிட வர்க்கத்திற்குள்ளும் ஒரு மனிதனுக்கும் மற்றொருவனுக்குமிடையே அறிவுநிலை வெவ்வேறு படித்தரத்தினதாய்ப் பேதப்படுகிறது. எழுதப்படிக்கவறியாப் பாமரன் ஒருவன் ஓர் பண்டிதனின் வார்த்தைகளை நம்பாவிடின் நஷ்டமடைவான். இசைக்கருவிப் பேச்சு, வானொலி, கம்பியில்லாத் தந்தி, ஆகாய கமனம் முதலான பல்லாயிரக்கணக்கான புதிய வித்தைகளை நாம் நாடோறும் கண்டுங் கேட்டும் வருகிறோம்; இவை எவ்வாறு நடைபெறுகின்றன என்னும் உண்மையை நாம் அறியோம்; ஆயினும் இவ்விஞ்ஞானக் கலைச் சத்தியங்களை நாம் நம்பவில்லையா? நம்போன்ற சாமான்ய மக்களுக்கு இதுகாறும் இவை மறைபொருட்களாய் இருந்து வருகின்றன அல்லவா? நமது அறிவுக்கெட்டாமையால் இவை பொய்யானவை என நாம் கொள்ளலாகுமா? இவ்விடத்துத்தான் விசுவாசம் என்பது தோன்றுகிறது. இவ்விஷயங்களில் நம்மைக் காட்டினும் சிறந்த அறிஞராயிருப்பவர் கூற்றை நாம் நம்ப வேண்டியது அவசியமாகிறது. தீர்க்கதரிசிகள் ஏனைய மாந்தரைப் பார்க்கினும் உயர்ந்த ஞானிகளாவர்; ஆதலின் அவர்கள் கூற்றில் நாம் நம்பிக்கை கொள்ளவேண்டும். எல்லாத் தீர்க்கதரிசிகளைக் காட்டினும், எம்பெருமான் முஹம்மது(ஸல்) அவர்கள் தலைசிறந்த ஞானியாகவும், நமக்குச் சமீப காலத்தவராகவும் இருக்கின்றார்கள்; எனவே, இவ்வுலகிற்றோன்றிய ஏனைய மாந்தர் வாக்கைக் காட்டினும் அப்பெருமானார் வாக்கியங்கள்மீது சிறப்பாக விசுவாசங் கொள்ளுதல் வேண்டப்படுவதாகும். எல்லா ஞானங்களும் சர்வஞ்ஞனாகிய இறைவனிடத்திருந்தே பிறப்பனவாயிருக்கின்றன; ஆதலின் அவனது திருவாக்கியங்களே முதன்மையாக விசுவாசிக்கத் தக்கனவாம். நமது அறிவுக் கெட்டுவதாயினும் எட்டாததாயினும் தெய்வவாக்கை நாம் நம்பவேண்டும்; ஏனெனில், நிகழ்கால உணர்ச்சியோடு வாழ்தலன்றிச் சென்ற காலத்தைப்பற்றியும் எதிர்காலத்தைப் பற்றியும் நாம் ஒன்றும் அறியோம். குர்ஆன் ஷரீப் கூறுவதுபோல, இறைவனும் அவனது தூதர்களும் பின் வருவனவற்றின்மீது விசுவாசங்கொள்ளுமாறு போதித்திருக்கின்றார்கள் :—"சன்மார்க்கமாகிறது, நீங்கள் (தொழும்போது) நுங்கள் முகங்களைக் கிழக்கு நோக்கியும் மேற்கு நோக்கியும் திருப்புதல் (மட்டும்) அன்று; ஆனால் அல்லா(ஹ்)வின் மீதும், இறுதி(த்தீர்ப்பு) நாள் மீதும், அமரர்கள் மீதும், வேதத்தின்மீதும், நபிமார்



(தீர்க்கதரிசி)கள் மீதும் விசுவாசங் கொள்ளுவோரே சன்மார்க்கராவர்........." (குர். 2 : 177). "அவர்கள் மறைவானதன் மீதும்......உமக்கு வெளியிடப்பட்டுள்ள (வேதத்)தின்மீதும், உமக்கு முற்காலத்து வெளியிடப்பட்டுள்ள (வேதத்)தின் மீதும் விசுவாசங் கொள்ளுவோராவர்..........." (குர். 2 : 3 - 4).

(e) **இகலோகக் கன்மங்களின் பலாபலனைப் பெறும் பரலோக வாழ்க்கை யுண்மையை நம்புதல்.** நாம் இம்மையிற் புரியும் கன்மங்களின் இலட்சியமாகிய மறுமை வாழ்க்கையுண்மையை முற்காலத்துத் தீர்க்கதரிசிகள் யாவரும் வலியுறுத்திச் சென்றிருக்கிறார்கள். இவ்வுலகிற் செயலுருவாக விதைக்கும் வித்தானது, பரலோகத்திற் பலன் அளிக்கிறது. விதைப்பது நெற்பயிராயின் விளைவு நெல்லேயாதலன்றிப் பிறிதாவதில்லை. நற்காரியங்களின் வித்துக்கள் நற்பலனே தரக்கூடியன. இவ்விஸ்லாமிய சித்தாந்தத்தையும், சுவர்க்கபோகமானது, "ஒரு கண் கண்டிராததும், ஒரு செவி கேட்டிராததும், ஒரு மனம் கற்பித்திராததுமா யிருக்கிறது" என்று நபிகள் பெருமானார்(ஸல்) அவர்கள் அருளிச் செய்திருப்பதையும், கிறிஸ்து மதமும் யூதமதமும் அங்கீகரிக்கின்றன. இவ்வுலகில் நாம் புரியும் செயல்களுக்கு உத்தரவாதியாக வேண்டிய பரலோக வாழ்க்கை யொன்றில்லை எனக் கருதுவதாயின், தர்மத்திற்குச் சன்மானமும் அதர்மத்திற்குத் தண்டனையும் உளதென்று எல்லாச் சமயங்களும் பொதுவாகக் கூறும் போதனையை மெய்ப்பித்தல் கூடாமையாகும். மதுவருந்தும் வெறியரும், சூதாடுவோரும், பிறன்மனை விழைவோரும், தூர்த்தருமான எண்ணிறந்த மக்களை நம்மைச் சுற்றிலும் நாம் நாடோறும் காண்கிறோம். இவர்கள், தமது மதவிரோதமான தீச்செயல்களுக்கேற்ற தண்டனையை இவ்வுலகில் அடையாதிருத்தல் மட்டுமின்றிச் சந்துஷ்டியும் சம்பத்தும் நிறைந்தவர்களாய்க் காணப்படுகின்றனர்; இதற்கு நேர் மாறாக, மெய்யடியார்களிற் பெரும்பாலானோர், கொடிதாய் இம்சிக்கப்பட்டு, ஒழியாத் தொல்லைக்காளாகி வருந்துகிறார்கள். இவ்விபரீத நிலைக்குக் காரணம் யாது? தீயவொழுக்கமுடையார் தண்டிக்கப்படா திருப்பதேன்? இதன் காரணம், ஒவ்வொருவருடைய செயலுக்கேற்பச் சன்மானமும் தண்டனையும் பூரணமாய்ப் பெற்றநுபவிக்கும் பரலோக வாழ்க்கையொன்று இனி நிகழக் கூடியதாயிருத்தலேயாம். இதனாற்றான் மறுமை வாழ்வுண்டென்று நாம் நம்புகிறோம். மற்றொருவகை ஆராய்ச்சியும் இம்முடிபையே நமக்குக் காட்டுகிறது. ஆண்டவனுடைய அரசாங்கம் எல்லா உலகங்களையும், ஆங்காங்குமுள்ள ஊர்வன, நடப்பன, பறப்பனவாதி எல்லாப் படைப்பினங்களையும் சூழ்ந்ததாயிருக்கிறது. ஓர் அரசாங்கத்தார் விரும்புவதுபோல, தனது இராஜ்ஜியத்திலுள்ள எல்லாச் சிருஷ்டிகளும் நேயமாகவும் அமைதியாகவும் வாழவேண்டும் என்பதே இறைவன் திருவுளச் சித்தமாகும். ஓர் அரசாங்கத்திற்கு விரோதமாகக் கலகம் புரிவோர், மரண தண்டனையோ, தீவாந்தர சிட்சையோ, சிறைவாசமோ, அபராதமோ விதிக்கப்படுகின்றனர். இவ்வாறே மானிடர்க்கும் மானிடர்க்கும் இடையிலும், மானிடர்க்கும் மிருகமாதி ஏனைச் சிருஷ்டிகளுக்கும் இடையிலும், இரகசியமாகவோ பரகசியமாகவோ சமாதான பங்கம் விளைப்போர்க்குத் தண்டனையுண்டு. இத்தண்டனை இவ்வுலகிற் பூரணமாய் நிறைவேற்றப்படுதலை நாம் காண்கின்றோமில்லை. இந்நிலையினின்று இச்சிட்சைகள் அளிக்கப்படும் மற்றோர் உலக வாழ்க்கையில் நம்பிக்கை தோன்றுகிறது. கருணாமூர்த்தியாகிய இறைவன் சந்நிதானத்தில் நித்தியப் பேரானந்த வாழ்க்கையைப் பெறுதலே மானிட ஜீவியத்தின் இறுதி லட்சியமாகும். ஆதலின் பரலோக வாழ்க்கை

பெட்டி! பெட்டி!! பெட்டி!!!

நீங்கள் பணத்திற்குத் தக்க உறுதியான பெட்டியை வாங்க வேண்டுமாயின் 'லா காலேஜ் பிராண்டு' என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள். நேரில் வர விரும்புகிறவர்கள் **17, பேக்கர்** தெரு (லா காலேஜுக்கு எதிர்த் தெரு), சென்னை, வந்து திருப்தி யடையலாம்.



யுண்மையில் நம்பிக்கை கொள்ளுதல் இன்றியமையாததா யிருக்கிறது. இத்தகைய நிர்ணயங் கொள்ளுதலின் அவசியம் பற்றி குர்ஆனிலும் ஹதீஸிலும் திரும்பத் திரும்பப் பன்முறை அழுத்திக் கூறப்பட்டிருக்கிறது. இஃது இவ்வுலகில் நற்காரியங்கள் புரிதற்குப் போதுமான தூண்டு கோலாயிருக்கிறது. இது சம்பந்தமாக, குர்ஆன் ஷரீபின் பின்வரும் வாக்கியங்கள் கவனிக்கத் தக்கன :—4:87; 6:131; 7:51; 9:38; 10:24; 11:15; 13:2; 14:48; 42:20.

**(f) அமரர்கள் உளர் என விசுவாசித்தல்.** மலக்குகள் எனப்படும் வானவர் நமது கட்புலனுக்குப் புலப்படாதவராதலின், அன்னார் உளர் என நம்புதலும் முஸ்லிம்களின் விசுவாசப் பிரமாணங்களுள் ஒன்றாகும். பைபிளில் கேப்ரியல் என்றும் குர்ஆனில் ஜிப்ரீல் என்றும் குறிப்பிடப்படுபவர், ஈசா(அலை) அவர்கள்பாலும் எம்பிரான் முஹம்மது(ஸல்) அவர்கள்பாலும் உண்மையாகத் தோன்றின வானவராவர். அவர் மானிடரைப் பாவச் செயல்களினின்று மீட்கும் பொருட்டு, இறைவன் தூது கொண்டு, பல்வேறு தீர்க்க தரிசிகளுக்கும் தோற்றமளித்தவர். அமரர்கள் மானிடர் போன்ற மெல்லிய சிறகுகளுடைய ஓர் இனத்தவராவர். (குர். 35:1). அவர்கள் பாவஞ் செய்தறியார்; இறைவனுக்கு முற்ற முற்றக் கீழ்ப்படிந்தவர்களாய், ஒவ்வொரு கணமும் அவனது ஆக்ஞையை நிறைவேற்ற ஆயத்தமாயிருப்பவர். (குர். 66:6). இத்தகைய சிருஷ்டியினம் ஒன்றிருப்பது முதற்றோற்றத்தில் நமது உணர்ச்சிக் கெட்டாததாய்த் தோன்றுகிறது; ஆனால் நமது அறிவுக்கெட்டாத இவ்விஷயம் தெய்விக அருள் வாக்கியங்களால் தெளிவாக மெய்ப்பிக்கப்பட்டுளது. நம்மைச் சுற்றிலுமுள்ள எல்லாப் பொருட்களையும் நாம் காண்கின்றோமா? காண்கின்றோம் என்பது அபத்தமாகும். பூதக்கண்ணாடி என்னப்படும் அணுதரிசனிக்குத் தோன்றும் பொருள் மானிடரது சாதாரணப் பார்வைக்குப் புலப்படுவதில்லை. அன்றியும் இருளில் நாம் ஒரு பொருளையும் காணல் இயலாதாகையால், நமது விழிகளின் பார்வையானது ஒளியின் உதவியை வேண்டி நிற்கிறது; ஆனால் ஒளிகள் எல்லா வஸ்துக்களையும் காட்டப் போதுமானவையன்று. தௌராத், ஜபூர், இஞ்ஜீல், புருக்கானாதி நான்கு வேதங்களிலும் இறைவன் பன்முறை கூறியிருக்கும் திருவாக்கியங்களின் உண்மையை, நமது ஊனக் கண்களுக்குப் புலப்படாக் காரணத்தால் நாம் நம்பாதிருத்தல் அடுக்குமா?

**(g) எல்லா நபிமார்கள் மீதும் எல்லா வேதங்கள் மீதும் விசுவாசங் கொள்ளுதல்.** இப்ராஹீம், யஃகூப், மூசா, ஈசா(அலை) முதலியோரும், இவ்வுலகின் ஒவ்வொரு பாகத்திலும் தோன்றின ஒவ்வொரு தீர்க்க தரிசியும் இறைவனுடைய திருத் தூதர்களா என்றும், தௌராத்தும், ஜபூரும், இஞ்ஜீலும், புருக்கானும் ஏனைய வேதங்களும் இறைவன் திருவசனங்களேயாம் என்றும் நம்புதல் ஒரு முஸ்லிமுடைய விசுவாசப் பிரமாணங்களுள் ஒன்றாகும்; இப்போது விதிக்கு விலக்கான பேதம் ஒன்றுளது; அஃதாவது, நபிகள் பெருமான் முஹம்மது(ஸல்) அவர்கள் வாயிலாய், இஸ்லாம், அகில உலகத்தாருக்கும் பொது மதமாய்ச் சம்பூரணமாக்கப்பட்ட தென்றும், குர்ஆனுக்கு முன் அருளப்பட்ட வேதங்கள் சரித்திரகாலத்திற்கு முற்பட்டவையாதலின், அவை யாவும், திரிதலாலும் இடைச் செருகலாலும், தமது பூர்வ பரிசுத்தப் பண்பிழந்து நிற்கின்றனவென்றும் நம்புதலாம். இது பற்றிய குர்ஆன் திருவாக்கு வருமாறு :— "நாங்கள் அல்லா(ஹ்)வின் மீதும், எங்கள் பால் இறக்கப்பட்ட (வேதத்)தின் மீதும், இப்ராஹீமுக்கும், இஸ்மாஈலுக்கும், இஸ்ஹாக்குக்கும், யஃக்கூபுக்கும், அவர் சந்ததியாருக்கும் இறக்கப்பட்டதன்மீதும், மூசாவுக்கும் ஈசாவுக்கும் அளிக்கப்பட்டதன் மீதும், (ஏனைய) நபிமார்களுக்கு அவர்களது இரட்சகனிடத்திருந்து அளிக்கப்பட்டதன் மீதும் விசுவாசம் பூண்டிருக்கிறோம்; நாங்கள் அவர்களுள் ஒருவர்க்(கும் மற்றொருவர்க்) கிடையிலும் பேதம் கற்பிப்பதில்லை; அன்றியும் நாங்கள் (எல்லார்க்கும் இரட்சகனாகிய) அவனுக்கே கீழ்ப்படிபவர்களா யிருக்கிறோம் எனக் கூறுவீர்களாக." (குர். 2:136) பல்லாயிரக் கணக்கான ஆண்டுகளாக மாந்தர் யாவர்க்கும் மறைபொருளாயிருந்த இம் மகத்தான சத்தியமானது, இற்றைக்குச் சற்றேறக்குறைய 1400 ஆண்டுகட்கு முன்னர், அராபியப் பாலைவனத்தில் அவதரித்த எழுதப்படிக்க வறியாத் தீர்க்கதரிசியார் வாயிலாய் வெளியிடப் பட்டுள்ளது. இவ்விஷயத்தை யொட்டிய விரிவைக்குறிப்புரை 61-ற்காண்க.

---

**பிழைதிருத்தம்**

சென்ற மாதம் ஹதீஸ் நூன்முகம் 166-ம் பக்கம், பாரா 2, வரி மூன்றில் 'முதலாம்' என்பது இரண்டாம் என்றிருக்க வேண்டும். 167-ம் பக்கம் (I) பாராவின் தொடக்கத்தில் முஅவ்வல் என்றிருப்பது முஅல்லல் என்றிருக்க வேண்டும். அன்பர்கள் திருத்திப் படித்துக் கொள்ளுமாறு வேண்டுகிறோம்.

ஆசிரியர்.

# மீலாதுன்னபீ Meeladhun-Nabi

(ஆலீஜனாப் அப்துர் ரஜாக் காரைக்காலி, டி. எஸ். ஏ. காலேஜ், உமராபாத்)

'மீலாதுன்னபீ' என்பது மாபெரும் ஆத்மா பிறந்த நாளைக் குறிப்பதாகும். அந்த ஆத்மாவே எமது நபிபெருமானார் நபியே கரீம்(சல்) அவர்கள் மனிதர்களுக்கு நல்வழியைக் காண்பிக்க இவ்வுலகில் வந்துதித்தார்கள். அவர்களின் சட்டதிட்டங்கள் மனிதர்களுக்கு நேர்வழியையும், லாபத்தையும் கொடுக்கக்கூடியவைகளாகவே இருந்தன. இந்நாள் ஒவ்வொரு வருடமும் வந்து கொண்டிருந்தாலும், உலகமக்கள் அறியாமை என்னும் கடலில் மூழ்கி இருக்கும் இவ்வருடத்தில் இது மிக முக்கியமானதாயிருக்கிறது. மிஸ்டர் பர்னார்டுஷா என்னும் ஐரோப்பிய அறிஞர்,

> "முஹம்மது(சல்) சற்காலத்தில் இவ்வுலகத்திலில்லை. எனினும் அவர்கள் விட்டுப்போன வாரிசுகளான குர்ஆன், ஹதீது இவ்விரண்டு மிருக்கின்றன. அவற்றின்படி உலக மக்கள் நடப்பார்களேயாயின் தற்சமயம் இவ்வுலகில் கொழுந்து விட்டு எரிந்து கொண்டிருக்கும் பஞ்ச மாபாதக மென்னும் தீயணைந்து உலகத்தில் குளிர்ச்சி ஏற்படும்" என்று கூறியுள்ளார்.

அரேபியா தேசத்தைச் சூழ்ந்து கொண்டிருந்த அநாகரிக இருட்டை நாயக (சல்) மவர்கள் வந்து இஸ்லாமிய ஒளியால் விரட்டியடித்தார்கள். அந்த ஒளியே பிறகு உலகமெங்கும் பிரகாசிக்க வாரம்பித்தது. எம்பெருமானார் அவர்கள் இஸ்லாத்தைப் பரப்பும் பொருட்டு இவ்வுலகின் கண் வந்த சமயம் காபிர்கள் எவ்வளவோ தீங்குகள் விளைவித்தும், அவைகளை ரஹ்மத்துவில் ஆலமீன் என்னும் பதத்திற்கிணங்க பொறுத்துக்கொண்டு எம்பிரான் (ஸல்) இஸ்லாமிய மதத்தை மேன்மேலும் பரப்பலானார்கள். இப்படியாகப் பதினைந்து வருடங்கள் கழிந்தும் சிலரே நாயகமவர்களைப் பின்பற்றலானார்கள். அப்படிப் பின்பற்றியவர்கள் அல்லாஹ்வையே ஏகதெய்வமாக ஒப்புக்கொண்டார்கள்; ஆண்டவனுக்குப் பயந்து தம் வாழ்க்கையின் ஒவ்வொரு செய்கையையும் அவனது சட்டதிட்டங்களின் படியே செய்து வந்தார்கள்; தம் தேகம், பொருள், சொத்து முதலியவைகளை அவன்பால் ஒப்படைத்தார்கள்; அவன் கோபத்தினின்றும் தப்பித்தார்கள்; ஆண்டவன் பிரியப்படியே தம் தொழில்களை நடத்தலானார்கள்; நாயகத்தின் பேரில் நம்பிக்கை கொண்டார்கள்; அவர்களின் கட்டளையின் படியே நடந்தார்கள்; குர்ஆன், ஹதீது— கட்டளைகளை விட்டு ஒரு மயிரிழையாவது பிசகவில்லை; ஆண்டவனல்லாத மற்றொருவரின் உதவியையோ, கிருபையையோ அருளையோ நாடவில்லை; மற்றொருவனின் சொத்து, பொருள்களின் மீது ஆசைகொள்ளவில்லை; தமது ஆவி, பொருள், சுதந்திரம் முதலியவைகளை ஆண்டவன் பாதையிலேயே செலவழித்தார்கள்; இஸ்லாத்திற்குத் தீங்கு ஏற்படச்செய்யும் பஞ்ச மாபாதகங்களை விட்டும் ஆண்டவனிடத்தில் காவல் தேடினார்கள்; அரேபியா அல்லாத மற்றத்தேசங்களுக்கும், நாடுகளுக்கும் (ஈரான், மிசிர்) சென்று சத்தியப்பிரசாரம் செய்தார்கள்.

இத்தகைய செய்கைகளையும், குணங்களையும், எண்ணங்களையும் கொண்ட சிலரே நாயகத்தின் மீது ஈமான் கொண்டுவந்தார்கள். இதற்குப் பிறகு எம்பெருமானாரவர்கள் இஸ்லாமிய மதத்தைப் பரப்ப நாடி இன்னும் முயற்சி செய்தார்கள். ஆண்டவனருளால் பிறகு எட்டு வருடங்களில் அரேபியா பூராவும் இஸ்லாமிய ஒளியைப் பரப்பச் செய்தார்கள்.

தற்சமயம் புதிய அரசாங்கங்கள், புதிய சட்ட திட்டங்கள் எனப் பற்பல ஓசைகள் நாலு பக்கங்களி லிருந்தும் செவிக்கு எட்டுகின்றன. இவை எங்கிருந்து வந்தன? பழைய அரசாங்கங்களே புதியனவாக மாறி விட்டனவா? அல்லது இவை புதியனவாகவே உற்பத்தியாகி இருக்கின்றனவா? ஒருகாலமும் கிடையாது. ஆனால் ஆண்டவனை மறத்தல், ஜாதி மதபேதம், சட்டதிட்ட வித்தியாசம், தற்பெருமை, சுயேச்சை முதலான கெடுதிகளே மனித வாழ்க்கையை ஒழித்து விட்டன. குர்ஆன், நாயகத்தின் சொற்களான ஹதீது முதலியவைகளை மக்கள் மறந்து விட்டார்கள். அவைகளைத் தெரிந்து கொள்ளவும் நமது இஸ்லாமிய சகோதரர்கள் முன்வரவில்லை. இவைகளிலிருந்து நாம் மீண்டு நல்வழியை அடையவேண்டு மென்கிற எண்ணமிருந்தால் குர்ஆனையும், நாயகமவர்களின் ஹதீதையும் அறிந்து அதன்படி நடப்பதே நலம். அதனை ஞாபகமூட்டவே மீலாதுன்னபீ ஆண்டுதோறும் வருகிறது.

# ரேடியோவில் மீலாத் பிரசங்கம்

## MEELAD SPEECH IN RADIO

***By Alijanab V. S. Md. Ibrahim Sahib, Palakkarai, Trichy.***

**(ஆலீஜனாப் வீ. எஸ். முஹம்மத் இப்ராஹீம் சாஹிப், பாலக்கரை, திருச்சி.)**

மார்ச் 19-ஆம் தேதி வெள்ளிக்கிழமையன்று மாலை 7-15மணிக்கு ஈதே மீலாதைப் பற்றிக் கால் மணி நேரம் அகில இந்திய ரேடியோ திருச்சி நிலையத்திலிருந்து, பாலக்கரை ஆலீஜனாப் வீ. எஸ். முஹம்மத் இப்ராஹீம் சாஹிப் அவர்கள் சொற்பெருக்காற்றினார்கள். சொற்பெருக்கு கேட்பதற்கு இனிமையாகவும் பொருள் செறிவு, சொல் நயம் மிகுந்ததாகவு மிருந்தது. அச் சொற்பெருக்கு ரேடியோவில் கேட்கமுடியாத அன்பர்களுக்காக வென்று பிரசுரிக்கப் படுகிறது:—

"படியுங்கள், அல்லது படித்துக் கொடுங்கள், அல்லது மேலே சொன்ன இரு வகுப்பாருக்கும், உதவி செய்யுங்கள்" என்று உலகமக்களை நோக்கிச் சொன்ன நமது நபி பெருமான் முகம்மது சல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் பிறந்த நாளை இன்று உலகமுழுதுமுள்ள மக்கள் கொண்டாடுகிறார்கள். நாமும் இப்போது இங்குக் கொண்டாடுகிறோம். நாம் கொண்டாடுவதற்குக் காரணம் உத்தமன் பிறந்த நாள் உலகம் சிறந்த நாள் என்பதற்காகவே யாகும். இப் பெருநாளையே நாம் ஈதே மீலாத் எனச் சொல்லுகிறோம்.

இப்பெரு நாளிலே நமது நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் வரலாற்றையும், அருஞ்செயலையும் பெருங்குணத்தையும் எண்ணி மகிழ்வதும் பிறருக்குச் சொல்லி மகிழ்வதும் பிறர் சொல்லக் கேட்டு மகிழ்வதும், கேட்டவாறு பின்பற்றி நடந்து மகிழ்வதும் பெருநலம் பயக்கும் என்பது எனது எண்ணம். அவர்கள் பிறந்த நகரமானது அவர்களைப் பெற்றதினால் பெரும் புகழ் பெற்ற மக்கா நகரம். அதுவே, அராபிய நாட்டின் தலைநகரம். அராபியநாடு நாம் வாழுகின்ற இந்த ஆசியாக் கண்டத்திலேயே, மேற்கிலுள்ள தொரு பழமையான நாடு. இவர்கள் திரு அவதாரஞ் செய்த நாள் ரபீயுல் அவ்வல் பிறை 12 ஆகும்.

எம்பெருமான் பிறந்து இன்றைக்கு ஏறக்குறைய 1400 வருஷங்கள் ஆயின. அவர்கள் 63 வருஷங்கள் இவ்வுலகில் வாழ்ந்தார்கள். பிறந்த மூன்று வருஷங்களுக்குள்ளேயே பெற்றோர் இருவரையும் இழந்தார்கள். சிறிய தகப்பனாரால் வளர்க்கப் பெற்று வாலிபம் அடைந்தார்கள். வாழ்வில் முதல் நாற்பது வருஷங்கள், வர்த்தகத்திலும் கைத்தொழிலிலும் கழிந்தன என்றாலும் அக்காலத்திலுங் கூட அவர்களின் சிறந்த நடையும் உயர்ந்த குணமும் அந்நாட்டிலுள்ள பிறமக்களிடத்திலே காண முடியாதிருந்தன.

இது, இன்றைக்குங் கூடச் சரித்திர ஆசிரியர்களாலே ஆச்சரியத்தோடு சொல்லப்படும் செய்தியாகும். அவர்களுடைய வாழ்வின் பிற்பகுதியாகிய 23 வருஷங்களை உலகமக்களுக்காகக் கழிக்கப் பெற்றது. அக்காலத்தில்தான் நமது நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் இஸ்லாத்தின் தீர்க்கதரிசியாகவும் அராபிய நாட்டின் தனிப் பெருந்தலைவராகவும் விளங்கி வந்தார்கள். அவர்கள் அக்காலத்தில் மக்களை நோக்கிச் சொன்ன போதனைகள் எல்லாம் மக்களால் கைப்பற்றி நடக்கக் கூடியவைகளாக இருந்தன. அவர்கள் சொன்னார்கள் என்பதைவிட நடந்து காட்டினார்கள் என்பதே மிகவும் பொருத்தமானதாக இருக்கும்.

அவர்கள் வாழ்க்கையில் நடந்த ஒவ்வொரு நிகழ்ச்சியையும் அக்காலத்தில் அருகிலிருந்த முஸ்லிம்கள் மிகவும் குறிப்பாகவும் விளக்கமாகவும் எழுதி வைத்திருக்கிறார்கள். அது, உலக முஸ்லிம்கள் அதைப் பின்பற்றி நடக்க வேண்டும் என்பதற்காகவே யாகும். அவ்வாறு நடப்பதே நம் மார்க்கத்தின் நோக்கமுமாகும். நமது மார்க்கம் என்பதெல்லாம் நமது நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் நடந்து காட்டிய மார்க்கமேயாகும்.

"இஸ்லாம்" என்ற நமது சமயம், உலகந் தோன்றிய காலத்தே தோன்றித் தொன்று தொட்டே நடை பெற்று வருகிறது. இஸ்லாம் என்ற சொல்லிற்கு அமைதி முக்தி என்ற அர்த்தங்கள் உண்டு. அதாவது அமைதியின் வழியே முக்தி பெறுதல் எனப்பொருள் கூறலாம். ஆதம், இப்ராஹீம், நூஹு முதலிய தீர்க்கதரிசிகளின் மார்க்கமும் இஸ்லாமே யாகும். ஆண்டவனுடைய கட்டளைப் படி பல நபிமார்கள் பல காலங்களில் தோன்றி யிருக்கிறார்கள். அவரவர்கள் அவ்வப்போது தோன்றி அவ்வக்கால மக்களுக்கு வேண்டிய தேவைகளை அப்போதைக் கப்



போது விளக்கி வந்திருக்கிறார்கள். இது நபிகள் நாயகம், முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்ல மவர்களின் திரு அவதாரத்தோடு முற்றுப் பெற்றிருக்கிறது.

ஆகவே, இஸ்லாம் மார்க்கம், உலகம் தோன்றிய காலத்தே தோன்றியும் பல நபிமார்களைத் தோற்றுவித்தும் அவ்வப்போது மக்களுக்கு வேண்டியிருந்ததை விளக்கியும் கடைசியாக நமது நாயகம் அவர்களைத் தோற்றுவித்தும் அவர்கள் மூலம் மக்கள் நடந்து கொள்ள வேண்டியவற்றை நடந்து காட்டியும் இப்போதும் இனி எப்போதும் எல்லா மக்களுக்கும் எல்லா நாட்டிற்கும் எக்காலத்திற்கும் ஏற்ற முறையில் எல்லாத் துறைகளையும் போதித்தும் இதுவரை கோடிக்கணக்கான மக்களை உய்வித்தும் இன்றைக்குங்கூட 50 கோடி மக்களால் பின்பற்றி வருவதுமாக இருந்து வருகிறது. இச்சிறப்பிற்குக் காரணம் நமது நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் பெருஞ் சொல்லும் அரும் செயலுமே யாகும். இதனாலேயே, பிற மதத்தைச் சார்ந் தொழுகும் நண்பர் ஒருவர் நமது நபிகள் பெருமானைக் குறிப்பிட்டுச் சொல்லும்போது "உலக முழுவதும் ஒளி வீசி வருகிற இஸ்லாமிய மாணிக்கம் ஒன்று அராபிய நாட்டில் காட்சி கொடுத்தது" எனக் கூறினார். இவ்வர்ணிப்பில்கூட ஓர் ஒளி வீசுவதை நான் காண்கிறேன்.

அக்காலத்தில் அராபிய நாட்டை இருள் மூடியிருந்தது. மக்கள் அஞ்ஞானத்தில் மூழ்கியிருந்தனர்; கல்வியோ நாகரிகமோ அவர்களுக்கில்லை. வாழ்க்கையோ காட்டுமிராண்டித்தனமேயாகும். குடி, கூத்தி, கொள்ளை முதலியவைகளைக் கூசாது கையாள்வர்; ஒருவருக்கொருவர் சண்டையிட்டுக் கொண்டேயிருப்பர்; ஒரு சிறு செயலுக்காக நூற்றுக்கணக்கான வருஷங்கள் சண்டையிட்டு வந்திருக்கின்றனர். ஒவ்வொரு குடும்பத் தலைவனும் ஒவ்வொரு சர்வாதிகாரியாய் விளங்கினான். அவர்கள் சேர்ந்து வாழக் கற்றுக்கொள்ள வில்லை. அதனால், அவர்கள் நூற்றுக்கணக்கான வகுப்புகளாகப் பிரிந்து வாழ்ந்து வந்தார்கள். ஒரு வகுப்பு மற்றொரு வகுப்புமீது படையெடுத்துப் போரிடுவதே தினசரி வாழ்க்கையா யிருந்து வந்தது. எதிரியைத் தோற்கடித்து நான் வெற்றியடைய வேண்டும் என்பதில் ஒவ்வொரு வகுப்புத் தலைவனுக்கும் பேராசையும் பெரும் வெறியும் இருந்து வந்தது. அவர்கள் ஆடுமாடுகளை மேய்த்துக்கொண்டு ஊர் ஊராய்த் திரிவதும் வழியில் கிடைக்கும் பொருள்களைக் கொள்ளையடிப்பதுமே தங்களுடைய தொழிலாகக் கொண்டிருந்தார்கள். தங்களைத் தாங்களே ஆண்டு கொள்ள முடியாமல் ரோமர் ஆட்சியிலும், அபிஸீனியர் ஆட்சியிலும் அடிமைப்பட்டு வாழ்ந்து வந்தனர். இத்தகைய சீர்கெட்ட நிலைமையிலிருந்த மக்களைச் சீர்திருத்துவதும் அடிமைப்பட்ட நாட்டை மீட்பதும் என்றால் அது லேசான காரியமாகுமா? இத்தகைய செயற்கரிய செயலை நமது நபிகள் பெருமான் 23 வருஷங்களில் செய்து முடித்தார்கள். இனிய சொற்களால் சொன்னதும் இயன்ற வழிகளில் நடந்ததுமே அவர்கள் கையாண்ட முறையாகும். மக்கள் அனைவரும் புத்துணர்ச்சி பெற்றனர்; சிறந்த குடும்பஸ்தர்களாக மாறினர்; கல்வி ஒழுக்கங்களில் தலை சிறந்து விளங்கினர்; ஆண்டவன் பக்தி உள்ளத்தே ஊறியது; கைத்தொழிலும் வர்த்தகமும் சிறந்தன; நாகரிகத்திலும் பிறரை விடச் சிறந்தனர். இஃது உலக மக்களையே திகைக்கச் செய்து விட்டது. அம்மக்களிற் பலர் ஆசிரியர்களாகவும் அரசர்களாகவும் ஆனார்கள். இதைவிட நமது பெருமானார் அருஞ் செயலுக்கு வேறு உதாரணங்களைச்



**S. M. ISMAIL & CO.**



*TAILORS OF TASTE*

**43-A, Rattan Bazaar Road,**

**(UPSTAIRS) P. T. MADRAS.**

சொல்ல வேண்டியதில்லை யென்றே நினைக்கிறேன்.

ஆச்சரியத்திற்கு உரிய சங்கதி ஒன்று என்னவென்றால் நமது நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் கல்வி கற்றதுமில்லை, எவரிடமும் சிஷ்யராக இருந்து எந்தப் பாடமும் கேட்டதுமில்லை என்பதேயாகும். இதைவிட ஆச்சரியப் படக் கூடியது என்னவென்றால் அதுவும் ஒன்று இருக்கிறது. அது கல்வி கேள்வியில்லாத இவர்களுடைய திருவாக்கிலிருந்துதான் உலகப் பிரசித்திபெற்ற புனித இஸ்லாமிய திருமறையான குர்ஆன் ஷரீப் உண்டாயிற்று என்பதேயாகும். இது நமக்குப் பெருத்த ஆச்சரியமாக இருக்கும். இச் செய்திகளை ஆண்டவனின் திரு உள்ளம் என்று சொல்லுவதே உண்மையாகும். நமது திருமறையின் ஒவ்வொரு சொல்லும் 1400 வருஷங்களாக உலக மக்கள் பலராலும் ஆராய்ச்சி செய்யப் பெற்றும், இஸ்லாமிய உலக முழுவதும் கையாளப் பெற்றும் வந்திருக்கிறது. நமது நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்கள், திருமறையின் மூலம் கற்பித்த போதனைகள் அனைத்தும் மக்கள் நலங்கருதியும் உலக நலன் கருதியுமே இருப்பது கண்டு ஆராய்ச்சி யாளர்கள் இன்றைக்குங்கூடப் பெருமையாகச் சொல்லி வருகிறார்கள். இது ஆண்டவனின் திருஉள்ளமேயாகும். ஆண்டவன் "ஒருவனே" என ஒப்புக்கொள்ளும் எல்லா மதங்களையும் ஒன்றாகச் சொல்லலாம். ஆண்டவன் ஒருவனே எனச் சந்தேகமில்லாமல் விளக்கிக் காட்டிய மதம் இஸ்லாமிய மதம் தான். இன்றைக்கும் பல மதங்கள் ஆண்டவன் ஒருவனே என்று ஒப்புக்கொள்ளுகின்றன. இஃது இஸ்லாமியக் கொள்கை என்பதில் எள்ளளவும் சந்தேகமில்லை. இச்சித்தாந்தத்தை ஒப்புக் கொண்டால் மதவெறுப்பு அடியோடு அற்றுவிடும். இதன் பெருமை இஸ்லாத்திற்குச் சொந்தமாகும்.

உலகம் தோன்றிய காலத்திலிருந்தே மக்கள் சமூகத்தில் சமத்துவத்தை உண்டாக்குவதற்குப் பல தலைவர்கள் பல வேறு காலங்களில் முயன்றிருக்கிறார்கள். என்றாலும் நமது நபிகள் பெருமான் அவர்களைப் போலச் சமத்துவத்தை நிலைநாட்ட எண்ணி—முயன்று வெற்றி பெற்றவர் எவருமில்லை. இக்காலத்திலுள்ள முஸோலினி, ஹிட்லர், ஸ்டாலின் போன்ற சர்வாதிகாரிகள் தங்களின் படைபலத்தைப் பயன்படுத்தியுங்கூட இம்மாதிரியான சமத்துவத்தை நிலைநாட்ட முடியவில்லை.

துருக்கியின் தலைவர் இனூனு, ஆப்கன் தலைவர் அமீர், ஈரான் மன்னர், அரபிய அரசர், ஹைதராபாத் நிஜாம் ஆகியவர்கள் ஆண்டவனைத் தொழ மஸ்ஜிதுக்குச் சென்றால் அங்குத் தம் வேலைக்காரர்களுடனும் பரம ஏழைகளுடனும் தோளோடு தோள் சேர்ந்து நின்றுதான் தொழவேண்டும். அப்படித்தான் இன்றும் நடை பெறுகிறது. தொழுகை மட்டும் அல்ல. சாப்பாட்டிலும் அவ்விதமே. மக்காவில் ஹஜ்ஜு செய்ய உலகத்தின் பல வேறு பாகங்களிலுமிருந்து, பலவேறு நாட்டார்கள் வருவதுண்டு. அந்தப் படி வந்துள்ள பத்து லட்சக்கணக்கான மக்களுக்குள்ளே நாட்டு வேற்றுமையோ ஜாதி வேற்றுமையோ நிற வேற்றுமையோ இட வேற்றுமையோ சாப்பாட்டு வேற்றுமையோ உடை வேற்றுமையோ உடையின் நிற வேற்றுமையோ காண முயன்றாலும் முடியாது. இதைக்காணும் பொழுது இஸ்லாத்தில் சமத்துவம் எவ்வளவு கட்டாயப்படுத்திச் சொல்லப் பட்டிருக்கிறது, இஸ்லாமியர்கள் சமத்துவத்தை எவ்வளவு பிரியத்தோடு கைப்பற்றி நடந்து வருகிறார்கள் என்பது நன்றாகத் தெரியும்.

சமத்துவம் எப்படி வற்புறுத்திச் சொல்லப் பட்டிருக்கிறதோ, அப்படியே சகோதரத்துவமும் சொல்லப்பட்டிருக்கிறது. இஸ்லாத்தில் முதன்மையாகக் கையாளவேண்டியது சகோதரத்துவமே. ஏழை பணக்காரர், வெள்ளையர் கருப்பர், ஆண்டான் அடிமை என்ற வேற்றுமை இஸ்லாத்தில் இல்லை. இதை நமது நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் தமது வாழ்நாளிலேயே பலரும் பின்பற்றும்படி நடந்து காட்டியிருக்கிறார்கள். அவர்களின் போதனையானது, அந்நாட்டில் எந்த மக்களையும் சமமாகக் கருதாத, ஜாதி வெறி பிடித்த குறைஷிகளைக் கூட மிகவும் அருவருக்கத் தகுந்த கருப்பு காப்பிரியான ஹஜரத் பிலாலையும் சமமாகக் கருதி நடக்கும்படி செய்திருக்கிறது. கருப்பு அடிமை பிலால், வெள்ளை அடிமை சையது, பணக்கார அபூபக்கர், பலசாலி உமர், வாலிப வீரர் அலீ யாவரும் சகோதரர்களைப் போலவே நடந்து வந்திருக்கின்றனர்.

எம்பெருமானுக்கு ஏழைகளின் மீதுள்ள கருணையையும், இரக்கத்தையும் எடுத்துச் சொல்லிவிட முடியாது; தம் சொத்து முழுவதையும் முதலில் ஏழைகளைக் கூப்பிட்டுக் கொடுத்து விட்டார்கள்; சொத்துக்களை வாங்கிக்கொண்ட அந்த ஏழைகளின் முகத்தில் காண்கின்ற சந்தோஷத்தைக்கண்டு நாயகம் சந்தோஷம் அடைந்தார்கள். வறுமையாளர்,



துன்பப்பட்டோர், நோயாளர், அநாதை ஆகியவர்களை ஆதரிக்க வேண்டியது முக்கியமான கடமையாகும். தொழுகைக்கு அடுத்தது ஜக்காத்து. அதாவது தர்மம் செய்ய வேண்டும் என்பது கட்டளை. ஒவ்வொருவரும் தம் சொத்தில் 40ல் 1 பங்கு வருஷந்தோறும் ஏழைகளுக்குக் கொடுத்து வரவேண்டுமென நமது திரு குர்ஆன் கட்டளை யிட்டிருக்கிறது. கட்டளை மட்டும் அல்ல; சக்தியிருந்தும் இந்த ஏழை வரியைச் செலுத்தாத எவனும், இஸ்லாத்தின் கடமையை நிறைவேற்றியவன் ஆகமாட்டான் என்பதே மார்க்கத்தின் சட்டமுமாகும்.

பிறரிடத்தே படிக்காமல் ஞானத்தால் ஒளி வீசும் நமது நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள், "கல்வி என்பது ஆண் பெண் இருபாலாருக்கும் தேவை. சிறந்த கல்வி சீனாவிலிருந்தாலும் அங்கேயும் போய்க்கற்க வேண்டும்" என்று வற்புறுத்திச் சொல்லியிருக்கின்றார்கள். இப்போதனையைப் பின்பற்றி அரபியர்கள் மிக்க குறுகிய காலத்தில் கல்வியிற் சிறந்தார்கள். அவர்களிற் பலர் மிகவும் மேதாவிகளாகவும் உலகத்திற்குப் போதிக்கும் பேராசிரியர்களாகவும் விளங்கினார்கள். அக்காலத்தில் அரபிய நாட்டில் கல்வியில்லாதிருக்குமானால், உலகம் இன்றுள்ள சிறந்த நிலையை அடைந்திருக்க முடியாதென்பது மேல்நாட்டு அறிஞர்கள் சொல்லும் அபிப்பிராயமாகும். நாமும் இப்போது நாடு முழுவதும் மத்ரஸாக்கள் வைத்து நடத்துவதும் திரு குரானே ஷரீபின் கட்டளையைப் பின்பற்றியேயாகும். நமது தென்னாட்டில் இன்னும் பல கிராமங்கள் மத்ரஸா இல்லாமலிருக்கின்றன. அவற்றை நிறைவேற்றி வைக்கவேண்டியது நமது பெருங்கடமையாகும் என்பதை இந்த நல்ல நாளிலே நினைப்பூட்டுகிறேன்.

பெண்மக்களைப் பெருமைப்படுத்திய பெருமான் நமது நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களே ஆவார்கள். அவர்களை அடிமைத் தனத்திலிருந்து விடுவித்துச் சுதந்திரம் அளித்தார்கள்; சொத்துரிமை, விவாக உரிமை, விதவா விவாக உரிமை, விவாகரத்து உரிமை முதலியவைகளை வழங்கினார்கள். இதுவும் இதுபோன்ற பிறவும் பெண்மக்களுக்குத் தேவையென இன்றைக்குப் பல மாகாணங்களில் சட்டம் செய்ய முன்வருகிறார்கள். இவை 1400 வருஷங்களுக்கு முந்தியே நமது தீர்க்கதரிசி உலகிற்குத் தேவையென முன்னதாக அறிந்து நிறைவேற்றிய சட்டங்களாகும். மற்றும் பெண்மக்களைப்பற்றிக் குறிப்பாக, தாய்மார்களைப் பற்றிப்பேசும் பொழுதெல்லாம் நமது நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் மிகப் பெருமையாகவும் உயர்வாகவும் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

ஆகவே, இந்தப் பெருநாளிலே நமது நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் பிறந்ததற்காக மகிழ்ச்சியடைந்தும் அவர்களுடைய வாழ்க்கைச் சரித்திரத்தைப் படித்தும் போதனையைப் பின்பற்றி நடந்தும் நல்லொழுக்கத்தைக் கடைபிடித்து நல்ல முறையில் நடந்து காட்டியும் கல்வியை வளர்த்தும் இல்லாத ஏழை மக்களுக்கு எக்காலத்தும் வழங்கியும் சிறப்பெய்தி நல்வாழ்வு வாழ வேண்டுமெனச் சகோதர சகோதரிகளை வேண்டிக்கொள்வதோடு எனது பேச்சை முடிக்கிறேன். அஸ்ஸலாமு அலைக்கும்.

---

## ஆப்பிரிக்காவில் அஹ்மதியா மஸ்ஜித்

## Ahmadiya Masjid in Africa

மேற்கு ஆபிரிக்காவிலுள்ள லாகோஸ் நகரத்தில் அஹ்மதியா மஸ்ஜித் ஒன்று கட்டப் படுவதற்காக ஸர் ஜபருல்லாகான் அவர்களால் 13–3–43ல் அஸ்திபாரக்கல் நாட்டப்பட்டது. மேற்காபிரிக்காவில் இதுதான் முதல் அஹ்மதிய மஸ்ஜிதாகும். நைஜீரிய முஸ்லிம்கள் இதில் அதிகம் பங்கெடுத்துக் கொண்டனர். லாகூர் சங்கத்தினர் இதற்காக 5000 ரூ. கொடுத்தனர்.

இனாம் இனாம்

மாதம் 775 ரூபாய் சம்பாதியுங்கள்

நீங்கள் மாதந்தோறும் 775 ரூபாய்க்கு மேல் சம்பாதிக்க விரும்பினால், எங்களின் "உண்மையான பிரெஞ்ச் தங்கம் (Real French Gold) விற்க ஏஜன்ஸி எடுத்துக் கொள்ளுங்கள் 6 தோலா பிரெஞ்ச் தங்கம், அழகிய வளையல் ஒரு ஜதை, கம்மல் ஒரு ஜதை, அழகிய மோதிரங்கள் இரண்டு ஆகியவை மாதிரிக்காக இனாமாக அனுப்பி வைக்கப்படும். நகைகளின் விவரமடங்கிய கேட்லாகும், ஏஜன்ஸி நிபந்தனைகளும் இலவசமாக அனுப்பிவைக்கப்படும். இன்றே எழுதுங்கள்.

The Allied Traders,
P. B. 261, Lahore.

# இஸ்லாமும் ஒற்றுமையும் (Islam & Unity)

ஆலீஜனுப் ஸையத் முஹம்மத் பாஹிர் சாஹிப், பனைக்குளம்.

நம் மார்க்கத்திற்கு இஸ்லாம் என்னும் நாமகரணஞ் சூட்டப் பெற்றது அல்லாஹ்வின்பாலிருந்தே என்பதை நாம் ஒவ்வொருவரும் அறிந்திருக்கிறோம். இஸ்லாம் என்னும் அரபிப் பதத்தின் பொருள்கள் ஒன்று இரண்டல்ல; பல பொருள்கள் அதற்குண்டு. சாந்தி, சமாதானம், சகோதரத்துவம், ஒற்றுமை என்ற பல பொருள்களையுடையது இஸ்லாம். நாம் இற்றை நாளில், நமது சாந்தி மார்க்கமாகிய இஸ்லாத்தில், 'ஒற்றுமை-கட்டுப்பாடு' என்னுந் துறைகளில் எவ்வளவு முன்னேற்ற முடையவர்களாக(?) மிளிர்கின்றோம் என்பதைச் சற்று ஆராய்வோம்.

இஸ்லாம், தேசப்பாகுபாட்டுப் பெருமை, பதவிப் பெருமை, குலப்பெருமை, நிறப் பெருமை, செல்வப் பெருமை ஆகிய பெருமைகளனைத்தையும் வேரறுத்து விட்டது; ஒரு முஸ்லிம் எந்தப் பெருமை பெற்றவனாயிருப்பினும் ஜம்பம் பாராட்ட இயலாது. ஆனால், அவரவரின் தக்வா (இறைவன்பால் உள்ள ஒழுக்கம்) என்பதாலேதான் சிறப்பெய்தல் சாலும்; அதன் வாயிலாய் இகபரமிரண்டிலும் நற்பேறுகளை யெய்தல் இயலும்.

தற்போது, காலச்சக்கரத்தின் கடும் வேகச் சுழற்சியால், நம்மவரிடையே மார்க்க அறிவு குன்றி, அதன் பயனாய் மார்க்க பக்தி குன்றி, அதனால் நமது ஆசார ஒழுக்கங்களில் பற்பல குறைகள் நிறைந்து விட்டதால், நாம் பிற சமூகத்தாரை விடக் கீழ்நிலையுற்றவராயும், பிற்போக்காளராயும் ஆகிவிட்டோமோ? எனக் கருத இட மேற்பட்டு விட்டது. மார்க்கக் கலைகளைக் கசடறக்கற்ற முஸ்லிம் மேதாவிகளிற் சிலர் தாங்கள் கற்றவற்றைக் கொண்டு பாமர மக்களை நல்வழிப் படுத்தற்கு அஞ்சுகின்றனர். இவர்கள் 7, 8-வருடங்கள் அல்லும் பகலும் உழைத்து மார்க்கக் கல்வி பயின்றதன் பயன், இவர்கள் தங்கள் ஜீவனோபாயத்திற்காகத் தம் மூர்களைத் தவிர அடுத்த ஊர்களிற் சென்று மஸ்ஜிதுகளில் மட்டும் வஃலு என்னும் உபதேசங்கள் புரிந்து, அதன் மூலமாய்க் கிடைக்கும் ஊதியத்தைக் கொண்டு வாழ்வதொன்றே என்று எண்ணுகின்றனரேயன்றி, 'தங்களின் சுயமான குடும்பத்தினர், சுற்றத்தினர், தெருவினர், ஊரினர் எத்துணைப் பிற்போக்கிலிருக்கின்றனர்? அவர்களை எவ்வாறு சீர்திருத்தலா' மென்று கனவிலுங் கூடக் கருதுவதில்லை என்றால், நம் சமூகம் மார்க்காக்ஞைகளில் சிதைவுற்றும், நலிந்தும் காணப்படுவதற்கு வேறெங்கேனும் காரணந் தேடிப் போகவா வேண்டும்?

மார்க்கக் கலைகளென்னும் பெருஞ் சாகரக் கரைகளைக் கண்ட கண்ணிய மிகும் உலமாக்களே! நீங்கள் நமது சமூகம் இவ்வளவு படுபாதாளத்தில் இடறி வீழ்ந்து குப்புறக் கிடப்பதைக் கண்டுகொண்டும் ஏனோ மௌனம் சாதிக்கின்றீர்கள்! உங்களுக்கு மட்டும் அல்லாஹ்வின் கடின கேள்விக்கணக்குகள் நாளையுண்டாகாமற் போய்விடும் என்ற எண்ணமா? எனவே, நம் சமூகம் உங்களுடைய மார்க்கத் தொண்டுகளைப் பெரிதும் விழைந்து நிற்கின்றது! நீங்கள் ஆவன செய்ய வீறுகொண்டு முன் வாருங்கள்! வீடுதோறும், ஊரெல்லாம் மார்க்க முழக்கம் செழிக்கச் செய்வீர்களாக!

நம் மார்க்கத்தின் தற்காலத் துயரங்களைத் துடைத்தெறிவான் வேண்டியும், நம் சமூகத்தை மேன்மைப் படுத்துவான் வேண்டியும் பெரும் பெரும் முயற்சிகளும் தியாகங்களும் செய்ய முன் வரும் நல்லறிஞர்களும் நம்மில் இல்லாமலில்லை. அவர்கள் பத்திரிகை வாயிலாய்த் தங்கள் மனோரதத்தைச் செலுத்த முயலுகின்றனர். ஆனால், நம்மில் விரல் விட்டெண்ணி விடக்கூடிய அளவுள்ள சில மக்களைத் தவிர, மிக மிகப் பெரும்பாலோர் ஆதரவு கொடுப்பதில்லை. ஆதரவுக்குப் பிரதியாய், 'இப் பத்திரிகையில் இது சொத்தை; அது சொள்ளை' என்று அந் நல்லோர்கள் ஆரம்பிக்கும் பத்திரிகைகளைக் குற்றஞ் சாட்டி, அவற்றைத் தலைதூக்க விடாது மட்டந் தட்டி விடுகின்றனர். ஆனால், இம்மனிதர்கள் முஸ்லிம் சமூக வைரிகளாயுள்ள ஹிந்துக்களின் பத்திரிகைகளையே கொஞ்சுகின்றனர்; குலாவுகின்றனர்; போற்றுகின்றனர். இதிலிருந்து நம்மவர்களின் சமூகப் பற்று, சமூகக் கட்டுப்பாடு ஆகியவை எவ்வளவு சிறந்து விளங்குகின்றன என்பதை எளிதில் மதித்து விடலாமன்றோ? இத்தியாதி காரணங்களால், நாளிதுவரை எத்தனை முஸ்லிம் பத்திரிகைகள் புகழொடு தோன்றி, ஆதரிப்பாரற்று மறைந்தொழிந்து விட்டன? மார்க்க, சமூக, தேசீய நலன்களுக்குப் பாடுபடும் முஸ்லிம் பத்திரிகைகளை நம் தமிழ் நாட்டு முஸ்லிம்கள் எதுவரை ஆதரிக்கவில்லையோ அதுவரை நாம் வீழ்ச்சி நிலையை



விட்டு விடுதலை பெற அருகதையுடையவர்களாக மாட்டோம் என்பது திண்ணம்; திண்ணம்.

இஸ்லாத்தில் ஏக தெய்வக் கொள்கை முதற்படியாகவும், ஏக சகோதர வாஞ்சை இரண்டாம்படியாகவும் நிறுவப்பட்டுள்ளன. ஏக சகோதர வாஞ்சையின் மறு பொருள், ''முஸ்லிம்கள் ஒற்றுமை, கட்டுப்பாடு இவைகளில் நனி சிறந்து வாழ வேண்டும்'' என்பதேயாம். ஏனென்றால், அது சம்பந்தமாய் அல்லாஹ், ''ஒற்றுமையென்னும் கயிற்றைக் கெட்டியாகப் பிடித்துக் கொள்ளுங்கள்'' எனத் தன் திருமறையின்கண் சட்டமாக்கியுள்ளான். எனவே, இச்சட்டத்தை அமலில் நடத்திவர நமக்கு முதன் முதலில் ஏக சகோதரத்துவம் வேண்டற் பாலதாகி விட்டது. 'இந்நாளில் நமது சகோதர வாஞ்சை எக்கதிக்காளாய் விட்டது?' என்பதை நினைக்க நெஞ்சம் புண் படுகின்றது. இதனால் நம் மார்க்கச் சிறப்பைப் பிற மதத்தினர்பால் எடுத்துரைப்பதற்கு நா கூசுகிறது. நம் சமூகம் இத்துணை மதிப் பிழந்து, சகல துறைகளிலும் பிற் போக்கடைந்து போயினமைக்குக் காரணம் யாதென்றெண்ணுகின்றீர்கள்? நம்மிடம் சகோதர வாஞ்சை யில்லை; ஒற்றுமை யில்லை; கட்டுப்பாடில்லை. இப்படியிருப்பதால் என்னாகும்? இறைவன் திருவாக்காகிய, ''.................ஒரு சமூகத்தின் வாழ்க்கை ஒற்றுமையிலும், கட்டுப்பாட்டிலுமே இருக்கிறது'' என்பதற்கிணங்க, நம் சமூகம் வாழ்க்கையற்ற-ஜீவனற்ற ஒரு சமூகமாக மாறிவிடும் அன்றோ?

முன்னொரு பழங்காலத்தில் நம் முஸ்லிம் சமூகம் ஒரு ஜீவனுள்ள சமூகமாகத் திகழ்ந்தது; நேர்வழியிலிருந்தது. ஏன்? அப்பண்டைக்கால மூதாதை முஸ்லிம்கள் ஒருவர்க்கொருவர் உயர்வு தாழ்வு பாராட்டினரில்லை; அவர்களனைவரும் ஒருயிர் பெற்ற ஒரே உடல் போன்று இருந்தனர். உடம்பில் எங்கேனும் ஒரு சிறிய பாகத்தில் நோய் உண்டாயின், அஃது உடம்பு முழுவதையும் பாதிப்பதே போல் ஒரு முஸ்லிமின் துயரம் சகல முஸ்லிம்களையும் சார்ந்தது என மதித்து அத்துயரத்தில் தாங்களும் பங்கெடுத்தனர் அந் நல்லோர். ஆதலின், அவர்கள் சென்ற விடமெல்லாம் ஜெயபேரிகை முழக்கிச் சிறப்பெய்தினர். அன்னார்களின் அளப்பரிய அந்நியோன்ய பரஸ்பர ஒற்றுமையை


டீ! டீ!! டீ!!!

டீயில் சிறந்தது 'பிளாக்' மார்க் டீயே



இஃது உண்மையா அல்லவா? என்பதை உபயோகிப்பவர் அறிவர். இதன் பெயரை எங்கும் காணலாம். காரணம் என்ன? இதன் நன்மையான குணமே; கவர்ச்சிக் குரிய மணமே. ஒரு முறையேனும் இதை உபயோகித்துப் பாருங்கள். பின்னர், மற்றெல்லா இதர தேயிலைப் பானங்களை யெல்லாம் உங்கள் மனம் விரும்பாது. இவ்வுயரிய தேயிலையை இன்றே வாங்கிப் பரீட்சித்துப் பாருங்கள்.

M. ஹபீப் சேட் & Sons., P. T. மதராஸ்.

யும் சகோதர அன்பையும் கண்டு நடுநடுங்கினர் அக்காலத்தில் மாபெரும் வல்லரசுகளாய் விளங்கா நின்ற உரோமரும் பாரவீகரும். சொற்ப சேனை வீரர்களைக் கொண்ட ஒரு சிறிய முஸ்லிம் சைன்யம், பகைவர்களின்-கடல் வெள்ளம் போன்ற பெரும் பெரும் சைன்யங்களை யெல்லாம் புறமுதுகிட்டுக் கால்கள் பிடறியை வந்தடிக்கக் கதிகலங்கி ஓடச் செய்ய வில்லையா? ஏன்? அவர்கள் ஒற்றுமைப் பட்டு, நேர்வழி பெற்று அதனால் ஆத்மீக பலமும், வீரமும் செறிந்து விளங்கினார்கள் என்பதாலேதான் அம்மூதாதையர் பகைவர்களுக்குச் சிம்ம சொப்பனம் போன்றிருந்தனர். இன்று முஸ்லிம்கள் உலக ஜனத்தொகையில் 60 கோடிப் பேர் என்று பெருமை யடிக்கின்றோம். இருந்து மென்ன? நாமனைவரும் சொற்ப அளவினரான அம் முற்கால முஸ்லிம்களுக்கு எவ்வகையினாலேனும் ஈடாக இயலுமோ? இயலாது. ஏனெனில், அவர்களின் பதவிகளில் கோடியிலொரு பங்கையும் நாம் பெற்றுக் கொள்ள அருகர்களாயில்லை; அவர்களுக்கிருந்த ஆத்மார்த்த வன்மை நமக்கில்லை; அவர்களுக்கிருந்த வீரம் நமக்கில்லை; அவர்களிடமிருந்த ஒன்றுபட்ட மனப்பான்மை நம்மிலில்லை. எத்தகைய கொடிய ஊறு உண்டாகி, உயிரே போவதாயினும், தங்களருமையான மார்க்கக் கட்டளைகளுக்கு அணுப்பிரமாண மேனும் பிசகு செய்ய ஒருப்படமாட்டார்கள் அப்பழமை விழுமியோர். அற்ப உலக இன்பத்துக்கும் மார்க்கச் சட்டங்களின் வரம்புகளை யெல்லாம் உதறித் தள்ளி, விட்டுக் கொடுப்பவர்களாகின்றோம் நாம். இப்பொழுது தெரிகிறதா முற்கால நம் சமூகம் முறையே வாழ்ந்ததற்கும் வீழ்ந்ததற்கும் காரணம்?

இக்காலத்தில் ஒரே குடும்பத்திலுள்ளவர்களாகிய பெற்றோர் - பிள்ளை, அண்ணன் - தம்பியர் களுக்குள்ளேயே பிணக்கு. ஒரே ஊரில் ஒரு தெருவுக்கும் மற்றொரு தெருவுக்கும் கட்சிபேதப் பிணக்கு; அரசியலில் ஒரு கட்சி முஸ்லிமுக்கும், இன்னொரு கட்சி முஸ்லிமுக்கும் இடையே பிணக்கு - இவை போலவே ஒரு சிறு குடும்பம் முதல் பெரிய தேசம், சமூகம் வரையுள்ள முஸ்லிம்களாகிய நாம் பற்பல விதங்களில் பிணங்கிக் கொண்டும், பிளவுற்றுக் கொண்டும் ஒற்றுமைக்கேடர்களாகப் பெயரளவில் இஸ்லாமியர்களாய்க் காலங் கழிக்கின்றோம். நம் பரிசுத்த இஸ்லாத்தில் ஒற்றுமையை வளர்க்கவும், ஒற்றுமைக்குப் பங்கம் நேராதிருக்கவும் முன்னேற்பாடாக எத்தனையோ அரிய சாதனங்கள் அல்லாஹ்வாலும், அவன் ரஸூல் (ஸல்) அவர்களாலும் வகுக்கப்பட்டுள்ளன.

இஸ்லாத்தின் 2-ம் கடமையாகிய ஐங்காலத் தொழுகையை மஸ்ஜிதில் கூடி ஒரே இமாமைப் பின்தொடர்ந்து, வரிசை வரிசையாய்த் தோளொடு தோளாய் நின்று, ஒரே கிப்லாவை முன்னோக்கி, ஒரே நாயனை ஒரே விதமாக எல்லோரும் தொழுது நிறைவேற்ற வேண்டு மென்று கட்டளை யிட்டிருப்பது எதற்காக? பெருநாட் தொழுகைகளை ஊருக்குப் புறம்பேயுள்ள ஈத்காவிற்கு ஒரு ஊர் முஸ்லிம்களனைவரும் சென்று நிறைவேற்ற வேண்டு மென்றிருப்பது எதற்காக? அகில உலகிலும் பற்பல தேயங்களிலிருந்தும் பற்பல விதமான நிறம், பாஷைகளையுடைய முஸ்லிம் ஆண்களும் பெண்களும் மக்க மாநகருக்கு விஜயம் செய்து ஒரே இமாமைப் பின்பற்றி ஹஜ்ஜுக் கிரியைகளை நிறைவேற்றச் சட்டமாக்கப்பட்டிருப்பது எதற்காக? இவை யாவும் இஸ்லாமிய சகோதரத்துவ வளர்ச்சிக்காக ஏற்பட்டவையன்றோ?

அகில உலகிலுமுள்ள இஸ்லாமிய சமுதாயத்தினர் ஏகேசுவரக் கொள்கையினராயும், ஒரே நபியைப் பின்பற்றுவோராயும், ஒரே வேதத்தினை யுடையோராயும், ஒரேவிதமாக வணக்கங்களை நிறைவேற்றுவோராயும், ஒரே கிப்லாவை முன்னோக்குகின்றவராயும் இருக்கின்றனர். இதிலிருந்து விளங்கும் தாத்பரியம் என்ன? ‘முஸ்லிம்களனைவரும் ஒன்று பட்டிருத்தல் வேண்டும்; ஒருவருக்கொருவர் வேற்றுமை பாராட்டலாகாது’ என்பதே இவற்றின் தாத்பரியமாகும். (தொடரும்)


**Dr. N. M. சாமியின்**

**அபூர்வ மருந்துகள்**

எலிக்ஸிர் பெரோ குளோபின்-உடலை வளர்க்கும் டானிக் ரூ. 2-8-0

பெயின் ரிலீப்—வலிகளைத் தீர்ப்பதில் சஞ்சீவி போன்றது. ரூ. 1-0-0

டயாபெட்டிஸ்—சிறுநீரில் சர்க்கரை இருப்பதைத் தடுத்து நல்ல தத்துவமும், ஜீரணசக்தியும் தரும். ரூ. 15

**Dr. N. M. சாமி,**
65, பிராட்வே, மதராஸ்.


# கலம்பகம் News & Notes.

## போர் அரங்கம்
## War front

வட ஆபிரிக்காவில் நேசதேசப் படைகளின் கை மேலும் மேலும் வலுத்து வருகிறது. அமெரிக்கப்படை தானிசில் காப்ஸா என்ற இடத்தைக் கைப்பற்றி அதற்குமேலும் 30 மைல் முன்னேறினர். தானிஸ் பகுதியில் வடக்கு, கிழக்கு, தெற்கு ஆகிய மூன்று இடங்களில் நாஜிகள் கடுமையான போர் துவக்கியிருக்கின்றனர். நேசதேசப் படைகள் வீர உணர்ச்சியுடன் நாஜிகளை எதிர்த்து வருகின்றன.

ருஷியப் போர்முனையின் தென்பகுதியில் ஹிட்லரே அருகிலிருந்து போரை நடத்துவதாகத் தெரிகிறது. இல்மன் ஏரிக்குத் தெற்கே நாஜிகள் வசமிருந்த முக்கிய பகுதிகளை ருஷியர் கைப்பற்றி விட்டனர். ஸ்மோலன்ஸ்க் பகுதியில் ருஷியர் 32 ஊர்களைக் கைப்பற்றினர். கார்க்கோவ் முனையில் கடும் போர் நடைபெறுகிறது. இங்கு ஒரு முக்கிய ஊராகிய பயல்கொராடை ருஷியர் இழந்தனர். வியாஸ்மா, டோனெட்ஜ் பகுதிகளில் நாஜிகள் கடுமையாகத் தாக்குகின்றனர். லடோகா ஏரிக்கருகில் ருஷியர் கை வலுத்திருக்கிறது.

பர்மாவில் ஜப்பானியப் படைகளுடன் நேசதேசப் படை கடும் போர் செய்து வருகிறது. மாயூ தீபகற்ப முனையில் போர் கடுமையாக இருக்கிறது. ஹிடிங்வே, தொங்டாரா ஆகிய விடங்களில் நிலைமை நெருக்கடியாக விருக்கிறது. தொங்டாராவில் பிரிட்டிஷ்படைகளை ஜப்பானியர் 3 புறங்களிலும் சூழ்ந்து கொண்டிருப்பதாகத் தெரிகிறது. அரக்கான் முனையிலும் எதிரிகளின் தாக்குதல் கடுமையாக இருக்கிறது. வடபர்மாவில் கச்சின் பகுதிகளை நோக்கிவந்த ஜப்பான் படைகள் முன்னேற முடியாமல் நின்றுவிட்டன. கலடான் பகுதியை பிரிட்டிஷ் படைகள் காலிசெய்து வெளியேறிவிட்டன.

## ஹிட்லர் பேச்சு
## Hitler Speech

1942 நவம்பர் 8ஆந் தேதி பேசியதற்குப் பிறகு, இடையில் பெரிய மௌனம் சாதித்த ஹிட்லர், 21-3-43ந் தேதி யன்று 12-20 மணி முதல் 12-35 மணி வரை போரில் இறந்தவர்கள் தின விழாவில் ஒரு சொற்பொழி வாற்றினார். இது வரை போரில் 5,42,000 ஜெர்மானியர் கொல்லப்பட்டு விட்டதாகத் தம் பிரசங்கத்தினிடையில் அவர் அறிவித்தார்.

## நாஜிகள் முதலில் தாக்கலாம்
## Nazis May Strike First

இந்த வருடம் நேசதேசத்தினர் இரண்டாவது போர்முனை தொடங்குவதற்கு முன்னதாக நாஜிகளே முதற்படியாக மற்றொரு புதிய தாக்குதலை ஆரம்பித்து விடுவார்கள் என்று அறியக்கிடக்கிறது.

## ஐயர்—முஸ்லிமானார்
## A Brahmin Embraced Islam

தஞ்சை ஜில்லா, திருத்துறைப் பூண்டித் தாலுக்கா, திருநெல்லிக் காவல் திரு. எஸ். இராமநாத ஐயர் அவர்களின் குமாரர் திரு. ஆர். ஸ்ரீநிவாச ஐயர் அவர்கள் இவ்வூர் டவுன் ஹாலில் ஜனாப் எ. கே. எல். லெப்பை நெய்னா மரைக்காயர் அவர்கள் முன்பாக, இஸ்லாம் மார்க்கத்தைத் தழுவ விரும்பி விண்ணப்பித்துக் கொண்டதன் மீது ஜும்ஆ மஸ்ஜிதில், செவ்வாய்க்கிழமை இஷாத் தொழுகைக்குப் பின், ஆலிஜனாப் மௌலவீ பாஜில் இ. கே. முஹம்மத் தமீம் ஆலிம் நூரி அவர்களால் திருக்கலிமா சொல்லிக் கொடுக்கப்பட்டு அப்துர் ரஹீம் என்னும் பெயரிடப்பட்டார்.

## பீர் பகாரோ தூக்கிலிடப்பட்டார்
## Pir Pagaro Executed

ஸிந்துவைச் சேர்ந்த ஸையித் ஸபக்கத்துல்லா ஷா பீர் பகாரோ என்பவர் மன்னருக்கெதிராகப் போர் துவக்க முயன்றதாகக் குற்றம் சாட்டப்பட்டு ஹைதராபாத் இராணுவக் கோர்ட்டாரால் மரண தண்டனை விதிக்கப்பட்டார். இந்த விசாரணை 29-1-43 முதல் 23-2-43 வரை 26 நாட்கள் நடைபெற்றது. 20-3-43 காலை 8 மணிக்கு இவர் தூக்கிலிடப்பட்டார். இவருக்கு வயது 36 ஆகிறது. இவருக்கு 4 மனைவிகளும் இரு குமாரர்களும் உளர்.

### அரபிக்கு அபராதம்
### Fine to an Arab

ஈரான் குவைத் பிரதேசத்தைச் சேர்ந்த மன்சூர் பின் முபாரக் என்ற அரபி கள்ளிக் கோட்டையிலிருந்து தமது படகில் 13-ந் தேதியன்று சுங்க அதிகாரிகள் அனுமதி பெற்று 16 மூட்டை அரிசிகளும் அனுமதி பெருமல் 10 மூட்டை அரிசிகளும் ஏற்றிச் சென்ருராம். அனுமதியின்றி 10 மூட்டைகள் எடுத்துச் சென்றதற்காக 300 ரூ. அபராதம் விதிக்கப்பட்டார். அபராதம் கட்டத் தவறினல் 6 மாதம் கடுங்காவல் தண்டனை.

### லீக் கட்சித் தலைவர் கண்டனம்
### Muslim League Party Deputy Leader's Attack on Govt.

இந்தியா சட்டசபையில் நிதி மசோதா முதன் முறையாக 48 ஓட்கள் ஆதரவாகவும், 23 ஓட்கள் பாதகமாகவும் பெற்று நிறைவேறியது. முஸ்லிம் லீக் கட்சியின் உபதலைவர் நவ்வாப் ஜாதா லியாக்கத் அலீ கான் ஸர்க்காரின் போக்கைக் கண்டித்து, முஸ்லிம் லீகின் நோக்கம் இன்னதென்பதை விவரித்துக்காட்டி, பாக்கிஸ்தான் அவசியத்தை வற்புறுத்தி, 10 கோடி முஸ்லிம்களை ஹிந்துக்களோ மற்றெவரோ அசட்டை செய்து நடந்துகொள்ள முடியாதென்பதை விளக்கினர்.

### தேசீயப் போர் முன்னணி வேண்டாம்
### Jinnah's advice about National war Front

பீஹார் முஸ்லிம் லீக் காரியக் கமிட்டியைச் சேர்ந்த ஜனுப்கள் எல். மெஹ்தி, கே. பி. ஸகீருல் ஹக் ஆகியவர்கள் தேசீயப் போர் முன்னணி அங்கத்தினர்களாக இருக்கின்றனர். ஜனுப் ஜின்னுஹ், முஸ்லிம் லீகினர் தேசீயப்போர் முன்னணியில் இருக்கப் படாதென்று அறிவித்து விட்டார். எனவே, அவ்விருவரும் உடனே தேசீயப் போர் முன்னணியிலிருந்து ராஜினாமா செய்ய வேண்டுமென்று மேற்படி லீக் காரியக் கமிட்டி தீர்மானம் நிறைவேற்றியது.

*　　*　　*

ஸர்க்கார் தடையுத்தரவை மீறி மத்ஹெ சஹாபா கீதம் பாடிக் கொண்டு ஊர்வலம் வந்ததற்காக லக்ஷ்மணபுரியில் 19-3-43 ல் 60 சுன்னீ முஸ்லிம்கள் கைது செய்யப் பட்டனர்.

### மதிப்புரை
### நபிகள் நாயகமும் உலக சீர்திருத்தமும்

டிம்மி 1×8 அளவில் 10 பக்கங்கொண்ட சிறு பிரசுரம். ஆக்கியோர்: மௌலவீ எஸ். எம். அப்துல்லாகான் (ஜமாலி), அபிராமம். பிரசுரித்தோர்: இனமாக விநியோகித்தோர்: சன்மார்க்கத் தொண்டர் சபை, கூத்தாநல்லூர்.

இச்சிறு பிரசுரம் மீலாத் மலராக வெளியிடப்பட்டிருக்கிறது. இது அழகிய தெளிவான தமிழ் நடையில், எம்பிரான் நபிகள் நாயகம்(ஸல்) அவர்களைக் குறித்தும் இஸ்லாத்தின் பெருமைகளைக் குறித்தும், அரசியல், பொருளாதாரம், கல்வி, சமூகம் ஆகியவற்றில் எம்பிரான் செய்த சீர்திருத்தங்கள் குறித்தும் விளக்கப்பட்டிருக்கின்றன. இது பரிசுபெற்ற கட்டுரையென்றும் அறிகிறோம். இத்தகைய முயற்சியை நாம் பெரிதும் பாராட்டுகிறோம். இவ்வண்ணமாய்ப் பிரசுரங்கள் வெளியிடப்படுவதும் இலவசமாக விநியோகிக்கப்படுவதும் அவசியமாகும். பிறதனவந்தர்களும் சங்கங்களும் இம்முயற்சியில் ஈடுபடுவார்களாக.

### பாக்கிஸ்தான் மலர்

[டிம்மி 1×8 அளவில் 42 பக்கங் கொண்டது. தொகுத்தவர்: ஜனுப் டி. எஸ். ஏ. ரசூல். விலை அணு 6. கிடைக்குமிடம்: அஞ்சுமன் தரக்கியே உர்தூ ஆபீஸ், பாலக்கரை, திருச்சி.]

போர்க் காரணமாக வீசும் வெம்மைக் காற்றினிடையே மலர்ந்த இம்மலரில் ஜனுப்கள், C. N. அண்ணுத்துரை M. A., K. A. P. விசுவநாதம், P. K. பாபு சாஹிப், T. S. A. ரசூல், K. M. ஹனீப் சாஹிப் ஆகியவர்கள் பேனுவினின் றெழுந்த இதழ்கள் நறுமணம் வீசுபவைகளாக இருக்கின்றன. பாக்கிஸ்தான் அவசியத்தை மேற்படி அறிஞர்களின் கட்டுரைகளும் பிறர்கட்டுரைகளும் தெளிவாக விளக்குகின்றன. இம்மலர் ஒவ்வொருவர் கையிலும் இருக்க வேண்டியதாகும்.

### ஆபீஸ் விலாஸம் மாற்றம்

'நூருல் இஸ்லாம்' ஆபீஸ் இதுவரை 35, வெங்கட மேஸ்திரி தெருவிலிருந்தது. இப்போது 65, பிரா(ட்)வே என்ற புதிய விலாசத்திற்கு மாறியிருக்கிறது. நேயர்கள் கவனிப்பார்களாக.

ஆசிரியர்.


கலியாணங்கள், பண்டிகைகளுக்கு 45-வருட அனுபவமும்
21-பொன் மெடல்களும் பரிசுபெற்ற உயர்தரமான

# ரஹ்மான் ஸன்ஸ்

(T. A. ரஹ்மான் & சன்ஸ்)களுடைய

## 7 இரத்தினங்கள்

மேன்மையான குடும்பங்களுக்கு
தினசரி உபயோகிக்கக்கூடியவைகளை வாங்கினல்
**உங்களுக்கு சந்தோஷமாய் இருக்கும்**

1. வாசனை ஈரச் சந்தனம் & சந்தன பில்லைகள்
2. சுத்தமான காஜிப்பூர் பன்னீர்
3. வாசனை ஊதுபத்திகள் (உலக பிரக்யாதி யடைந்தவை)
4. நாகரீகத்திற்கேற்ற சென்ட் & தில்ஷாத் வாசனை எண்ணெய்
5. சந்தனுதி & அரைக்கீரை விதை தைலம் (கண்களுக்கும் மூளைக்கும் குளிர்ச்சி தரவும் கூந்தலை வளர்க்கவும் நிகரற்ற தைலங்கள்)
6. தசாங்கம் பொடி (பூசைக்கு ஏற்றது)
7. ஸ்ரீதன வெள்ளி கில்ட் அத்தர் பெட்டிகள் (கலியாணங்களில் கொடுப்பதற்குத் தகுந்த பரிசு

விலாசம்:—

**நெ. 10, சைனுபஜார்ரோட்டு,**
(கோவிந்தப்ப நாய்க்கன் தெருவுக்கு எதிரில்)
**ஜி. டி. மதருஸ்.**

கிளை:—

காரைக்குடி (ராமநாட் டிஸ்ட்டிரிக்ட்)

Regd. No. M. 4193





# சாயாதான் அவனுக்கு உயிர்





தீயணைக்கும் படையினர் இந்தியாவின் அஞ்சா நெஞ்சம் படைத்த தீரர்கள். ஸிவில் தற்காப்பைச் சேர்ந்த மற்றவர்களும் அப்படித்தான். அவர்கள் எல்லோருக்கும் சாயா என்றால் உயிர். தீயணைக்கும் படையினருக்கு அக்னியோடு போராடுமுன் பலமும் தெம்பும் கொடுப்பது தேயிலைதான்.

அவனுடைய உதாரணத்தைப் பின்பற்றி கஷ்டத்தை மறக்க இந்தியத்தேயிலையை சாப்பிடுங்கள்.

## மனச்சோர்வு காலங்களில் இந்தியன் டீயை குடியுங்கள்

இந்தியன் டீ மார்கெட் எக்ஸ்பான்ஷன் போர்டாரால் வெளியிடப்பட்டது I. K. 185


Printed by P. C. Manickavachaga Mudaliar at the Sengunthа Mithran Press, 33, Armenian Street, G. T. Madras, and Edited and Published by Hafiz A. N. Md, Yusuf (Baqavi), 65, Broadway, G. T. Madras.

